திராவிட மாயை ஒரு பார்வை — மூன்றாம் பகுதி



E–Book : 2019

ISBN: 978–93–83826–45–2

Published by




ஆதாரம் வெளியீடு

A division of

**RARE Publications**

'Sri Padmavathi Nivas', 2nd Floor
#2/9,Dr.Sadhasivam Street,
Thyagarayanagar, Chennai –600017
E–mail: info@rarebooksonweb.com
Website: www.rarebooksonweb.com

☐ **DRAVIDA MAYAI – Oru Paarvai– Part 3**

☐ © subbu ☐ Category: Current Affairs
E–Book Edition: 2019

Laser typeset by PageDesigns, Chennai

# சமர்ப்பணம்

மாறுபட்ட தமிழ்நாட்டுச் சூழலிலும்

மாறாதிருந்து

நாட்டுப்பற்றை வளர்க்கும் அன்பர்களுக்கு

இந்தப் புத்தகம் சமர்ப்பணம்

# எம்.ஜி.ஆருடைய அரசியல்தான் இதில் அதிகம் பேசப்படுகிறது

இந்திய விடுதலைக்கான போராட்டத்தில் தமிழர்களின் பங்கு மிக முக்கியமானது. வேதாரண்யம் உப்பு சத்தியாகிரஹத்தின் போது போலீஸ்காரர்களுக்கு சவரம் செய்ய மாட்டேன் என்று சபதம் எடுத்து அதன் விளைவாக ஆறுமாத சிறைத் தண்டனை பெற்ற நாவிதரின் பெயர் வைரப்பன். கதர் ஆடையையும் கழுத்தில் உள்ள தாலியையும், கை வளையல்களையும் தவிர மற்ற எல்லா ஆபரணங்களையும் நாட்டுப் பணிக்காக அகற்றிவிட்டவர் வை.மு.கோதைநாயகி, **'சாதி ஒழிய வேண்டும்'** என்று குரல் கொடுத்தவர் ஜி.சுப்ரமணிய ஐயர்— காங்கிரஸ் பேரியக்கத்தின் முதல் கூட்டத்தில் முதல் தீர்மானத்தை முன் மொழிந்தவர் என்ற பெருமை இவருக்கு உண்டு (28—02—1885). வெள்ளையனுடைய வியாபார நோக்கம் கெடும்படியாக கப்பலோட்டியவர் வ.உ.சிதம்பரனார். ஆங்கிலேயரின் தலைமைப்பீடமான லண்டன் நகரிலேயே கலகக்கொடி உயர்த்தியவர் வ.வே.சு.ஐயர். ஆப்கானிஸ்தானுடைய காபூல் நகரில் **"இந்திய சுதந்திர சர்க்கார்"** என்ற அமைப்பை உருவாக்கிய செண்பகராமன், காந்தியப் போராட்டங்களின் முதல் களப்பலியான தில்லையாடி வள்ளியம்மை, பின்னி மில் போராட்டத்திற்கு தலைமை தாங்கிய திரு.வி.கல்யாணசுந்தரனார், அப்பழுக்கற்ற அரசியல்வாதி ராஜாஜி, மக்கள் தலைவர் கு.காமராஜ், திண்டுக்கல் சர்தார் சாகிப், குற்றப்பரம்பரைச் சட்டத்தை எதிர்த்துக் குரல் கொடுத்த பசும்பொன் முத்துராமலிங்க தேவர், கல்வியாளர் டி.எஸ்.அவினாசிலிங்கம் செட்டியார், ஜோசப் செல்லதுரை கொர்நீலியஸ் என்ற இயற்பெயர் கொண்ட பொருளாதார மேதை குமரப்பா. கொடிகாத்த திருப்பூர் குமரன், கே.பி. சுந்தரம்பாள், கக்கன் என்று முடிவில்லாத பட்டியல் இது.

தமிழகமே தேசியத்தில் மூழ்கி இருந்த போது, அதிலிருந்து விலகி வேறுபட்டு நின்றவர்கள் மிகச் சிலரே. அந்தக் கூட்டத்தின் முன்னணித் தலைலர் ஈ.வெ.ராமசாமி. இவருடைய அடிப்படைக் கொள்கை வெள்ளைக்காரனுக்கு வெண்சாமரம் வீசுவது, கவுரவக் குறைவான இந்த வேலைக்கு நியாயம் கற்பிப்பதற்காக அவர் கையில் எடுத்த காரணம் பிராமண துவேஷம். மற்றபடி அன்றாட வசனங்களும் அடிக்கடி ஒப்பனைகளும் மாறி வரும். ஹிந்தி எதிர்ப்பு, வடவர் எதிர்ப்பு, சாதி ஒழிப்பு என்பதெல்லாம் இவர் சால்ஜாப்புக்காக ஏற்படுத்திக் கொண்ட மேற்பூச்சுக்களே.

இப்படிப்பட்ட தலைவரின் வாரிசுகளுக்கு எம்.ஜி.ஆரின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாட யோக்கியதை இல்லை என்பதுதான் நம்முடைய கட்சி. ஈ.வெ.ரா. என்பவர் தமிழ மொழியின் எதிரி, இந்திய தேசத்தின் எதிரி என்பது புத்தகத்தின் உள்ளே விவரிக்கப்பட்டுள்ளது.

எம்.ஜி.ஆர். என்ற தமிழ்ப்பற்றாளரை இந்திய ஒற்றுமையில் அக்கறை கொண்டவரை, ஹிந்து மதச்சார்புடையவரை திராவிடர் கழகத்தவர்கள் கொண்டாடுவதற்கு எந்த பாத்தியதையும் இல்லை.

ஈ.வெ.ரா.வின் திசையிலிருந்து விலகிப் பயணித்தவர் எம்.ஜி.ஆர். எம்.ஜி.ஆர். மட்டுமல்ல, அவரை வழிநடத்திச் சென்ற சி.என்.அண்ணாதுரையும் பிற்காலங்களில் எவ்வாறு பண்பட்டிருந்தார் என்பதையும், இந்திய அரசமைப்புக்குள் தன்னுடைய கட்சியை அழகாகப் பொருத்திக் கொண்டார் என்பதையும் இதில் எழுதியுள்ளேன்.

ஈ.வெ.ரா.வின் வெகுஜன விரோதப் பாதையிலிருந்து விலகித் தன் கட்சியை நடத்தியவர் அண்ணாதுரை ஆனால் அண்ணாதுரையின் கொள்கைகளை அண்ணாதுரையின் மறைவிற்குப் பிறகு கருணாநிதி மறந்துவிட்டார். கட்சியை ஈ.வெ.ரா.விடம் அடமானம் வைத்துவிட்டார். அடுத்த கட்டத்தில் இந்தச் சீர்கேட்டில் இருந்து விலகி, எம்.ஜி.ஆர். அண்ணாதுரையின் பாதையில் அ.தி.மு.க.வை நடத்திச் சென்றார்.

திராவிடர் கழகத்தின் அமைப்பு விதிகளின்படி அதில் பிராமணர்கள் உறுப்பினர் ஆக முடியாது. ஆனால் தி.மு.க.வில் இந்தத் தடையில்லை. அண்ணாதுரை தி.மு.க.வில் பிராமணர்களைச் சேர்த்துக் கொண்டார்.

தி.மு.க.வைச் சேர்ந்த நாத்திகம் ராமசாமி இதைக் கண்டித்து எழுதினார். **‘மன்றம்’** என்ற தி.மு.க. அதிகாரப்பூர்வ இதழில் நெடுஞ்செழியன் **‘பிராமணர்களை சேர்த்துக் கொள்வது சரிதான்’** என்று விளக்கக் கட்டுரை எழுதினார்.

**‘நாத்திகம்’** என்று பெயர் வைக்கப்பட்ட இதழுக்கு தி.மு.க.வின் **‘நம் நாடு’** இதழில் (1958) விளம்பரம் தர முயற்சிக்கப்பட்டது. அதை தி.மு.க. தலைமை ஏற்க மறுக்கிறது. **‘நாத்திகம்’** இதழை தி.மு.க.வின் ஏடாகக் கருதக் கூடாது என்று தி.மு.க. தரப்பில் விளக்கம் வருகிறது. இதன் விளைவாக நாத்திகம் ராமசாமி தி.மு.க.விலிருந்து வெளியேற்றப்படுகிறார்.

— திராவிடமாயை ஒரு பார்வை — இரண்டாம் பகுதி /பக் 18.

காலம் சென்ற மு.கருணாநிதியின் தலைமையில் இயங்கிய தி.மு.க., அண்ணா போட்ட வழியில் போவதில்லை; எம்.ஜி.ஆரை மதிப்பதில்லை. இது பொதுவெளியில் அனைவராலும் அறியப்பட்ட விஷயம். ஆகவே அதுகுறித்து இங்கே விவரித்து எழுதவில்லை.

ஆதாரங்களைத் திரட்டி, தமிழக அரசியலின் குறிப்பிட்ட காலகட்டத்தைப் பிரதிபலிக்கும் படியாக (1967—1981) எம்.ஜி.ஆர். — தி.க. உறவு பற்றிய **‘அலசல்’** என்ற தலைப்பில் **‘விஜயபாரதம்’** வார இதழில் 25—11—2016 முதல் 26—05—2017 வரை எழுதினேன். அது தொகுக்கப்பட்டு திராவிட மாயை ஒரு பார்வை மூன்றாம் பகுதி என்ற தலைப்பில் இந்தப் புத்தகமாக உருவெடுத்திருக்கிறது. படித்துப் பயன்பெறுக.

இதை, ஈடுபாட்டு உணர்வோடு தட்டச்சு செய்து கொடுத்த திருமதி எஸ்.பிரேமாவுக்கு நன்றி. தொடரை வெளியிட்ட விஜயபாரத

இதழுக்கும் என்னுடைய உதவியாளராகச் செயல்பட்ட வி.எஸ்.ரவிச்சந்திரனுக்கும், நண்பர் வி.வெங்கட் குமாருக்கும், தேவைப்பட்ட பொழுது விவரங்களைத் தேடிக்கொடுத்த பெரியவர் வி.ராஜகோபாலனுக்கும், நண்பர் பா.கிருஷ்ணனுக்கும் என்னுடைய நன்றி.

* * * * * *

எம்.ஜி.ராமச்சந்திரன் என்று அதிகாரப்பூர்வமாகவும் புரட்சித் தலைவர் என்று அவருடைய கட்சிக்காரர்களாலும், எம்.ஜி.ஆர். என்று தமிழ் மக்களாலும் அழைக்கப்பட்டவரின் ஆளுமை இருபது ஆண்டு காலம் தமிழகத்தின் அரசியல் போக்கை நிர்ணயிக்கும் சக்தியாக இருந்தது என்பதை யாரும் மறுக்க முடியாது. அவருடைய திரைப்படங்களைப் போலவே அரசியல் வாழ்க்கையும் திருப்பங்களும் மோதல்களும் நிறைந்த சுவாரஸ்யமான நகர்வு.

தமிழக அரசியல் வரலாற்றை அதிலும் திராவிட இயக்கங்களை மையமாகக் கொண்டு ஆவணப்படுத்த வேண்டும் என்பது என்னுடைய முயற்சி. இதில் 1917 முதல் 1944 வரையிலான காலகட்டம் ‘திராவிட மாயை— ஒரு பார்வை— முதல் பகுதி’ என்று முதலில் இணையத்திலும் (தமிழ் ஹிந்து) பிறகு புத்தகமாகவும் வெளிவந்தது. அடுத்த பகுதி துக்ளக் வார இதழில் தொடராக 103 வாரங்கள் வெளிவந்து வாசகர்களின் ஆதரவைப் பெற்றது. இது **‘திராவிட மாயை— ஒரு பார்வை—இரண்டாம் பகுதி’** என்ற பெயரில் புத்தகமாக வந்தது. இது குறிப்பிடும் காலகட்டம் 1944 முதல் 1967 வரை.

உங்கள் கையிலிருக்கும் ‘திராவிட மாயை— ஒரு பார்வை— மூன்றாம் பகுதி’ 1967 முதல் 1981 வரை உள்ள காலகட்டத்தைக் குறிப்பிடும் பகுதியாகும். இந்தக் காலம் எம்.ஜி.ஆருடைய காலம், அவருடைய ஆளுமை முழுமையாக வெளிப்பட்ட காலம். திராவிட இயக்கத்தின் போக்கை மடைமாற்றியவர் எம்.ஜி.ஆர். என்பதை இனிவரும் பக்கங்களில் நிறுவ முயற்சிக்கிறேன்.

இதெல்லாம் ஒருபுறம் இருக்க, எம்.ஜி.ஆர். என்ற அதிசய மனிதரைப் புரிந்து கொள்ள ஒரு நிகழ்வைச் சொல்கிறேன்.

சி.எல்.ராமகிருஷ்ணன் என்பவர் அதிகம் அறியப்படாத ஆனால் உத்தமரான ஒரு காவல்துறை அதிகாரி (DGP). எந்த விதத்திலும் குறை சொல்ல முடியாதபடி இருப்பது இவருடைய வாழ்க்கை. சி.எல்.ராமகிருஷ்ணன் மத்திய புலனாய்வுத் துறையின் (சிபிஐ) தமிழகப் பிரிவில் பணியாற்றி வந்தார்.

ஒரு நாள் அவருக்கு அன்றைய முதல்வரான எம்.ஜி.ஆரிடமிருந்து அழைப்பு வந்தது. சென்று சந்தித்தார். சி.எல்.ஆருடைய பொருளாதாரப் பின்புலங்களை கேட்டுத் தெரிந்து கொண்ட எம்.ஜி.ஆர்., ஓர் காவல் துறை உயர் அதிகாரி வாடகை வீட்டில் வசிப்பதைத் தான் விரும்பவில்லை என்று தெரிவித்தார். வீட்டுவசதி வாரியத்தில் ஒரு வீடு ஒதுக்கீடு செய்வதாகச் சொல்லி அதை ஏற்றுக் கொள்ளும்படி வலியுறுத்தினார். வீட்டுவசதி வாரியத்தினுடைய ஒதுக்கீட்டை பெற்றுக் கொண்டாலும் அதற்கான மாதத் தவணையை தன்னால் கட்ட இயலாது என்று சொல்லி சி.எல்.ஆர். மறுத்துவிட்டார்.

விஷயம் இதோடு முடியவில்லை. வீட்டுவசதி வாரியத்தின் ஜீப்பும், அதிகாரிகளும் மறுநாள் காலையில் சி.எல்.ஆர். வீட்டிற்கே வந்துவிட்டாகள். முதுலமைச்சரின் உத்தரவுப்படி அவர்களுடைய வேண்டுகோளை மறுக்கமுடியாமல் குறைந்த அளவு வருமானம் உடையவர்களுக்கன¢ வீட்டைப் பெற்றுக் கொண்டார் சி.எல்.ஆர்.

இருந்தாலும் அவர் போலீஸ்காரரர் அல்லவா. எம்.ஜி.ஆர். எப்படி தன்னைத் தேர்வு செய்தார் என்ற கேள்வி அவரிடம் இருந்தது, விசாரித்துப் பார்த்தார். அவருக்கு கிடைத்தது இனிய அதிர்ச்சி. அப்பழுக்கில்லாத அதிகாரிகளில் சிலருக்கு எம்.ஜி.ஆர். உதவியிருக்கிறார் என்பதுதான் அந்தச் செய்தி.

கட்சிக்காரராக இருந்தபோதிலும், திரையுலகப் பிரமுகராக இருந்த நேரத்திலும் முதலமைச்சராகப் பதவி வகித்த போதிலும் எம்.ஜி.ஆர்.

கருணையோடு நீட்டிய கரங்களால் பயனடைந்தவர் எத்தனை பேர் என்பதைப்பற்றித் தனியாக ஒரு புத்தகமே எழுதலாம்.

இத்தகைய சம்பவங்களுக்கு இந்தப் புத்தகத்தில் முக்கியத்துவம் தரவில்லை. எம்.ஜி.ஆருடைய அரசியல்தான் இதில் அதிகம் பேசப்படுகிறது...

திராவிட மாயை முதல் பகுதி, இரண்டாம் பகுதி மற்றும் மூன்றாம் பகுதியை மேலோட்டமாகப் பார்ப்பவர்களுக்கு ஒரு முரண்பாடு தென்படலாம். முதல் இரண்டு பகுதிகளில் சி.என்.அண்ணாதுரை மீது வீசப்படும் வெளிச்சம் விமர்சனத் தன்மையோடு இருப்பதாகவும் மூன்றாம் பகுதி அவருடைய கீர்த்தியைக் கூட்டுவதாகவும் தோன்றலாம். இஅதச் சிக்கல் என்னுடைய வார்த்தைகளாலும் வாக்கியங்களாலும் ஏற்பட்டதல்ல. அதற்குக் காரணம் அண்ணாதுரையின் பொதுவாழ்க்கையில் ஏற்பட்ட அல்லது அவரே ஏற்படுத்திக்கொண்ட கொள்கை மாறுதல்கள் தான்.

தேசவிரோதியான ஈ.வெ.ரா.வின் சீடராக பொதுவாழ்க்கையைத் தொடங்கிய அவர் ஒரு நீண்ட நெடிய பயணத்தில் வெகுஜனத் தலைவராக உருவெடுத்து, இந்திய அரசியல் நெறிகளுக்கு உட்பட்டு ஆட்சி செய்கிற முதலமைச்சராகி, மறைந்தார். திராவிட மாயை புத்தகத்தின் மூன்று பகுதிகளும் வெவ்வேறு காலப்பகுதிகளைப் பற்றி விவரிப்பதால் இதனூடே முரண்பாடு இருப்பதாகத் தோன்றலாம் அவ்வளவுதான்.

என்னைப் பொறுத்தவரை அண்ணாதுரை என்பவரை “சேற்றில் மலர்ந்த செந்தாமரை” என்று சொல்லலாம்.

எம்.ஜி.ஆர். அரசில் அமைச்சராக இருந்த வி.வி.சுவாமிநாதனுக்கும் பெரியவர் கே.ராஜாராமின் குடும்பத்தினருக்கும் என்னுடைய நன்றி.

சோதனையான இன்றையச் சூழலில் என்னைக் காவல் அரணாகக் காத்திருக்கும் தமிழ் வாசகர்களுக்கு நன்றி.

ஆன்புடன்,

# உள்ளே...

# 1. முதலில் ஒரு வரலாற்று நிகழ்வு

திராவிடர் கழகத் தலைவரான கி.வீரமணி வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில், **‘சமூக நீதிக் கொள்கைகளைச் செயல்படுத்திய எம்.ஜி.ஆர். திராவிடர் கழகப் பாசறையில் இருந்து உருவானவர். சிறந்த பகுத்தறிவாளராக விளங்கியவர். அவரது நூற்றாண்டு விழாவைக¢ கொண்டாடுவோம்’** என்று சொல்லியிருக்கிறார். வழக்கமாக அந்தர்பல்டி அடிக்கும் கட்சி திராவிடர் கழகம். அதிலும் இது ஆகாச பல்டியாக இருக்கிறது. எம்.ஜி.ஆர். திராவிடர் கழகத்தைச் சேர்ந்தவர் என்பது முழுப் பொய். இருந்தாலும் பொய் பேசியே வளர்ந்ததுதான் இவர்களுடைய இயக்கம் என்பதால் எம்.ஜி.ஆருக்கும் தி.க.வுக்கும் உள்ள வேறுபாடுகளை சுட்டிக்காட்டி எழுத விரும்புகிறேன்.

எம்.ஜி.ஆர். 1967 தேர்தலில் தி.மு.க. சார்பாக பரங்கிமலை தொகுதியில் போட்டியிட்டார். தி.மு.க. அவருடைய பிரச்சாரத்தை வெகுவாக நம்பியிருந்தது. வில்லன் நடிகரான எம்.ஆர்.ராதா திராவிடர் கழகத்தைச் சார்ந்தவர். அந்த அணி தி.மு.க. மீதும் எம்.ஜி.ஆர். மீதும் கடுமையான விமர்சனங்களை முன்வைத்து நேரம் அது.

இதுபற்றி விவரமாக எழுதியுள்ளார் பத்திரிகையாளர் சுதாங்கன். **‘சுட்டாச்சு, சுட்டாச்சு’** என்று புத்தகத்திலிருந்து சில பகுதிகள், அல்லயன்ஸ் வெளியீடு.

கே.என்.என். வாசு என்ற காங்கிரஸ்காரர் புதுக்கோட்டை வாசி. பெரும் பணக்காரரான இவர் எல்லாம் இழந்து சென்னைக்கு வந்து குடியேறினார். திரைப்பட இயக்குனர்களான கிருஷ்ணன்&பஞ்சு இருவரும் இவரது நெடுநாள் சிநேகிதர்கள். வாசுவின் நிலை கண்டு பரிதாபப்பட்டார்கள். அவர்கள், ஒரு படம் எடுத்துக் கொடுத்து பொருளாதார ரீதியாக அவருக்கு உதவ எண்ணினார்கள். அந்தப் படத்துக்கு வாசுதான் தயாரிப்பாளர்.

வேலன் ஸ்டூடியோவில் படப்பிடிப்பில் இருந்து எம்.ஜி.ஆரிடம் வாசுவை அழைத்துச் சென்றார் இயக்குனர் பஞ்சு. வாசுவின் நிலைமையை எம்.ஜி.ஆரிடம் விளக்கினார். நிலைமையைப் புரிந்து கொண்ட எம்.ஜி.ஆர். வாசுவின் படத்தில் நடிக்க ஒப்புக் கொண்டார்.

படத்துக்குத் தேவையான பணத்துக்கு யாரை நாடுவது என்ற யோசனையில் ஆழ்கிறார் வாசு. அப்போதுதான் தன் பால்ய நண்பர் எம்.ஆர்.ராதாவின் நினைவு வந்தது.

ராதாவைச் சந்தித்தார் வாசு. படத்துக்கு பைனான்ஸ் செய்ய ஒப்புக் கொண்டார் ராதா. அத்துடன் சம்பளம் வாங்காமல் படத்தில் நடித்துக் கொடுக்கவும் சம்மதித்தார். இந்தப் படத்திற்கு **‘பெற்றால்தான் பிள்ளையா’** என்று பெயரிட்டார்கள்.

**‘பெற்றால்தான் பிள்ளையா’** படம் 1966ம் வருடம் டிசம்பர் மாதம் முடிவடைகிறது. 1967ம் வருடம் ஜனவரி மாத ஆரம்பத்தில் வாசு, எம்.ஜி.ஆரை சத¢யா ஸ்டூடியோவில் சந்தித்தார். படப்பிடிப்புக்கு வந்திருந்த வாசுவைக் கண்டதும் எம்.ஜி.ஆர். அருகில் வந்து அவர் தோளில் கைவைத்து நலம் விசாரித்தார்.

**‘அண்ணே, கோயமுத்தூரில் ஒரு வசதியான பார்ட்டி இருக்காம். படம் பண்ணிலாங்கிறாங்க. ராதாஅண்ணன் உங்க கிட்ட இந்த விஷயத்தைச் சொல்லச் சொன்னாங்க’** என்றார் வாசு.

**‘நல்ல வசதியானவங்களா இருந்தா படம் பண்ணலாமே’** என்றார் எம்.ஜி.ஆர்.

ஜனவரி 12, 1967, வியாழக்கிழமை, சென்னை தியாகராய நகர் நாணாராவ் தெருவில் உள்ள வாசுவின் வீட்டுக்கு ஒரு அம்பாசிடர் காரில் வந்து இறங்குகிறார் எம்.ஆர். ராதா. வாசுவிடம் **‘நான் சொன்ன கோயமுத்தூர் பார்ட்டி மெட்ராசுக்கு வந்து ஹோட்டல் அசோகாவில் தங்கியிருக்காங்க. எம்.ஜி.ஆர். ஹீரோவா ஆக்ட் பண்றதுன்னா பைனான்ஸ் பண்றேங்குறாங்க. எம்.ஜி.ஆர். ஒத்துக்கிட்டா நாளைக்கு**

**வெள்ளிக்கிழமை நல்ல நாளாம். இரண்டரை லட்ச ரூபாய் அட்வான்ஸ் தர்றாங்களாம்'** என்றார் எம்.ஆர்.ராதா.

**'இன்னிக்கு நாம போய் பேசிக்குவோம். நாளைக்கு அட்வான்ஸ் கொடுக்கும் போது அவங்களையும் கூட்டிகிட்டு போயிடுவோம்'** என்றார் வாசு.

அவர் சொன்னதை ராதாவும் ஏற்றுக் கொண்டார். மாலை 4.05 மணிக்கு ராதா, வாசுவிடம் **'எம்.ஜி.ஆர் தோட்டத்துக்கு போன் பண்ணி அவரு வந்துட்டாரா பாரு'** என்று சொன்னார்.

வாசு தோட்டத்துக்கு போன் செய்த போது எம்.ஜி.ஆரே லயனில் வந்தார். **'இப்பத்தான் பிரச்சாரம் முடிச்சிட்டு உள்ளே வந்தேன். நீங்க போன் பண்ணதா அம்மா சொன்னாங்க, என்ன விசயம்?'** என்று கேட்டார். **'அண்ணே அன்னிக்கு சொன்னோம்ல.. கோயமுத்தூர் பார்ட்டி, அவங்க மெட்ராஸ் வந்திருக்காங்க, அசோகா ஓட்டல்ல தங்கி இருக்காங்க, நாளைக்கு வெள்ளிக் கிழமை. நல்ல நாளு, ராதாண்ணன் எங்கூடத்தான் இருக்காங்க. இப்ப நாங்க வந்து பார்த்துப் பேசிட்டோம்னா, நாளைக்கு அட்வான்ஸ் கொடுத்திடலாம். ராதா அண்ணனும் இது சம்பந்தமா உங்களை பார்க்கனும்னு விருப்பப்படறாரு'** என்றார் வாசு.

வாசுவும் எம்.ஆர்.ராதாவும் எம்.ஜி.ஆர். தோட்டத்துக்குப் போனார்கள். அங்கு இருந்த வாட்ச்மேன் பப்பச்சன் கதவைத் திறந்தார். கார் பங்களாவின் முன்பக்கமாக போர்டிகோவில் நின்றது. இருவரும் இறங்கினார்கள். ராதாவின் கையில், ஒரு தோல்பை இருந்தது.

வீட்டின் முன் வராந்தாவில் இருந்த மேற்பார்வையாளர் ரத்னம் இன்டர்காம் மூலம் எம்.ஜி.ஆரிடம் பேசினார். **'அண்ணே, ராதா அண்ணனும், வாசு அண்ணனும் வந்திருக்காங்க'** என்றார் அவர்.

இருவரையும் வரவேற்பறையில் உட்கார வைத்துவிட்டு ரத்னம் அந்த இடத்தை விட்டு நகர்ந்தார். அங்கே இருந்த எம்.ஜி.ஆரின் வளர்ப்பு மகன் அப்பு என்கிற ரவீந்திரனும் வெளியேறினார். எம்.ஜி.ஆர்.

வரவேற்பு அறையில் முக்கிய விருந்தினர்களுடன் பேசும் போது அந்தப் பகுதியில் யாரும் இருக்க மாட்டார்கள். இது எம்.ஜி.ஆர். தோட்டத்து வழக்கம்.

வரவேற்பு அறையில் வடக்குப் புறமிருந்த ஸ்ப்ரிங் கதவைத் திறந்து, திரைச் சீலையை விலக்கிக் கொண்டு எம்.ஜி.ஆர். வந்தார். அப்போது ராதா சோபாவில் உட்கார்ந்திருந்தார். ராதாவைப் பார்த்து வணக்கம் சொல்லிவிட்டு தன் இருக்கையில் அமர்ந்தார் எம்.ஜி.ஆர். அவர் வெளிர் நிற டெர்லின் சட்டையும் நீர்ச் சலவை செய்த வேட்டியும் அணிந்திருந்தார். ராதா எழுந்து எம்.ஜி.ஆரின் மேஜைக்கு அருகில் இருந்த இரண்டு நாற்காலிகளுக்கு நடுவே இருமிக் கொண்டே வந்து நின்றார்.

# 2.தோட்டா பாய்ந்தது, திமுக வென்றது!

அது நடந்தது 1967 ஜனவரியில். எம்.ஜி.ஆருக்கு ராதாவின் மீது மிகுந்த மரியாதை உண்டு. அவர் நிற்கிறபோது எம்.ஜி.ஆர். உட்காரக் கூட மாட்டார். ராதாவை எதிரில் இருந்த நாற்காலியில் உட்காரச் சொன்னார் எம்.ஜி.ஆர்.

ராதா இருமினார்.

**“என்னண்ணே, உடம்புக்கு என்ன ஆச்சு?”** என்று கேட்டார் எம்.ஜி.ஆர்.

**“ஒரே இருமல். வயத்துல வாயுத் தொல்லை வேற. அதனால உட்கார முடியல்ல”** என்று சொல்லிவிட்டு எம்.ஜி.ஆர். இருந்த நாற்காலிப் பக்கமாக நெருங்கி வந்து பேசுவதற்காக வந்தார் ராதா. அதற்குள் வாசுவைப் பார்த்து வந்த விஷயத்தைப் பற்றி கேட்டார்.

வாசு ராதாவைப் பார்த்து, **“அண்ணே விஷயத்தைச் சொல்லுங்க”** என்றார். அதற்குள் ராதா ஓரிரண்டு அடி பின்னால் நகர்ந்து தான் முதலில் நின்ற இடத்துக்கே வந்தார்.

ராதா வாசுவைப் பார்த்து, **“ஏய்யா, நீதானே புரொட்யூசர். நீதான் கோயமுத்தூர் பார்ட்டி வந்திருக்கிறது. அவங்க என்ன பணம் கொடுக்கறேன்னாங்க எல்லாத்தையும் சொல்லணும்”** என்று சொல்லிக் கொண்டே எம்.ஜி.ஆர். நாற்காலிக்கு வலப்புறமாக நகர ஆரம்பித்தார்.

வாசுவையே கவனித்துக் கொண்டிருந்த எம்.ஜி.ஆர். ராதாவின் நடவடிக்கைகளை கவனிக்கவில்லை.

தன் முழங்கைகளை டேபிளில் ஊன்றி வாசுவுடன் பேச ஆரம்பித்தார் எம்.ஜி.ஆர். சரி என்று சொன்னால் அடுத்த நாளே இரண்டரை லட்ச ரூபாய் அட்வான்ஸ் கொடுக்க கோயமுத்தூர் பார்ட்டி தயாராக இருப்பதாக வாசு சொன்னார்.

**“பொங்கலுக்குப் பிறகு பூஜை போட்டு ஷூட்டிங் ஆரம்பிச்சதுன்னா நல்லாயிருக்கும். அப்போ இன்னொரு இரண்டரை லட்சம் ரூபாய் தர்றேங்கறாங்க. மாசத்துக்கு பத்து கால்ஷீட்னு ஆறு மாசத்துக்குக் கொடுத்தீங்கன்னா படத்தை முடிச்சிடலாம். இந்த விஷயமெல்லாம் ராதா அண்ணங்கிட்டதான் சொல்லியிருக்காங்க”** என்றார் வாசு.

எம்.ஜி.ஆர். **“60 கால்ஷீட் தேவையிருக்காதுண்ணே. ஒரு மாசம் விட்டு ஒரு மாசம், ஆறு மாசத்துக்கு, மாசத்துக்குப் பத்து கால்ஷீட் கொடுக்கிறேன். அப்படியும் படம் முடியலேன்னா முடியறவரைக்கும் டேட்தரேன்”** என்று சொல்லிவிட்டு, ராதாவைப் பார்த்து, **“என்னண்ணே, வாசு எல்லா கால்ஷீட்டையும் கேட்கிறாரே”** என்றார்.

அப்போது தன் காதுக்குக் கீழே இடிபோலேத் தாக்கி சதையைப் பிய்த்துக் கொண்டு ஏதோ உள்ளே செல்வதை உணர்ந்தார் எம்.ஜி.ஆர். என்று எழுதுகிறார் சுதாங்கன்.

அதாவது தன்னிடம் இருந்த கைத்துப்பாக்கியால் எம்.ஆர்.ராதா, எம்.ஜி.ஆரைச் சுட்டுவிட்டார். பிறகு தன்னையும் சுட்டுக்கொண்டார்...

நல்லவேளையாக மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு எம்.ஜி.ஆர். பிழைத்துக்கொண்டார். எம்.ஆர்.ராதாவும் உயிர் தப்பினார்.

நீதிமன்றத்தில் வழக்கு விசாரிக்கப்பட்டு செஷன்ஸ் நீதிபதி லட்சுமணன் 04.11.1967ல் தீர்ப்பு வழங்கினார். எம்.ஆர்.ராதாவை குற்றவாளி என்று அறிவித்து ஏழு வருடக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. பிறகு இந்த வழக்கு உயர்நீதிமன்றத்திலும் உச்சநீதிமன்றத்திலும் விசாரிக்கப்பட்டு தண்டனை மூன்றரை வருடமாகக் குறைக்கப்பட்டது.

செஷன்ஸ் நீதிபதியின் தீர்ப்பில் **“ராதா, எம்.ஜி.ஆர். மீது அரசியல் விரோதம் கொண்டிருந்தார். அவரைக் கொலை செய்து அரசியல் தியாகியாக வேண்டும் என்று எண்ணம் கொண்டிருந்தார்”** என்று சொல்லப்பட்டது.

எம்.ஆர்.ராதாவுக்கு ஏன் இந்தக் கொலை வெறி?

எம்.ஆர்.ராதாவுக்கு திராவிடர் கழகத்தின் மீது இருந்த பற்றுதான் இதற்குக் காரணம். ஈ.வெ.ரா.வோடு மோதல் ஏற்பட்டு தூத்துக்குடியில் நடைபெற்ற தி.க. மாநாட்டை (1947) அண்ணாதுரை புறக்கணித்தார். அந்த மேடையில் நடைபெற்ற நாடகத்தில் எம்.ஆர்.ராதா, அண்ணாதுரையைப் புறக்கணிக்க வேண்டுமென்று பேசினார்.

07.08.1949ல் திருச்சியில் நடைபெற்ற திராவிடர் கழக 19வது மாநாட்டில் எம்.ஆர்.ராதாவைப் பாராட்டி தீர்மானம் நிறைவேற்றப்பட்டது என்பதும் ஏப்ரல் 1951இல் காஞ்சிபுரத்தில் நடைபெற்ற மாவட்ட மாநாட்டில் எம்.ஆர்.ராதா குதிரை மீது ஏறி ஊர்வலமாக வந்தார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

1962 நவம்பரில் திராவிடர் கழகத்தின் தலைமை இடமான பெரியார் திடலில் **'ராதா மன்றம்'** என்ற அரங்கம் அமைக்கப்பட்டது என்பதும் முக்கியமான செய்தி.

திராவிடர் கழகத்திலிருந்து அண்ணாதுரையும், மற்றவர்களும் பிரிந்து சென்றது முதல் இரண்டு அமைப்புகளுக்கும் இடையே கொடிய பகை இருந்தது.

வயதான காலத்தில், இளம்பெண் மணியம்மையைத் திருமணம் செய்து கொண்டார் ஈ.வெ.ரா. (09.07.1949).

இதை அண்ணாதுரையும் மற்ற தொண்டர்களும் கண்டித்தனர்.

ஈ.வெ.ரா.விடம் நீதி கேட்டார்கள். தூதுக்குழுவை அனுப்பினார்கள். அவர் மசியவில்லை. பெட்டிச் சாவியை மணியம்மையிடம் கொடுத்துவிட்டார். அண்ணாதுரையும் மற்றவர்களும் வெளியேறி தி.மு.க. என்ற அரசியல் கட்சியைத் துவக்கினார்கள். (17.09.1949).

பிறகு, அந்தக் கட்சி 1967இல் தமிழ்நாட்டில் ஆட்சியைக் கைப்பற்றியது. இடைப்பட்ட காலத்தில் தி.மு.க. மீதும் அதன் தலைவர்கள் மீதும் திராவிடர் கழகத்தின் சார்பில் வெறுப்பு வீசப்பட்டது. இதன் உச்சக்கட்ட வெளிப்பாடுதான் எம்.ஆர்.ராதாவின் கைத்துப்பாக்கியில் இருந்து வெடித்தது.

குண்டடிபட்ட எம்.ஜி.ஆரின் போஸ்டர் அந்தத் தேர்தலில் தி.மு.க.வின் வெற்றியை உறுதி செய்தது.

ஈ.வெ.ரா.வுக்கும் தி.மு.க.வுக்கும் இடையே இருந்த வேறுபாடு பற்றிப் புரிந்துகொள்ள சில சாம்பிள்கள் தருகிறேன்.

# 3. நாடோடி மன்னனின் வில்லன் யார்?

விடுதலை இதழல் 31.07.1949ல் வெளிவந்த ஈ.வெ.ரா. வின் அறிக்கையில் ஒரு பகுதி:

**"எனக்கு என்றுமே துணைவர்கள் இருந்ததில்லை. எதிரிகள், சதிகாரர்கள் மத்தியில் இருந்து பழகிப் பழகி எதிரிகளுடையவும் துரோகிகளுடையவும் கடும் செய்கைக்குப் பாதிக்கப்பட முடியாத தன்மையை உடையவனாய் ஆகிவிட்டேன்"** என்று அதில் எழுதப்பட்டிருந்தது.

23.08.1949ல் விடுதலை இதழில் ஈ.வெ.ரா.வால் எழுதப்பட்ட தலையங்கத்தில்,

"அழுத கண்ணீருடனும் சிந்திய மூக்குடனும் ஆத்திரப்பட்டு மனம் பதறி அறிக்கைவிட்ட கழக மக்களில் சிலரின் முட்டாள்தனத்தையும், சிலரின் யோசனையற்ற தன்மையையும், சிலரின் பொறாமை குணத்தையும், சிலரின் அதிருப்தி, லஞ்சம், பழிவாங்கும் தன்மையையும் பயன்படுத்திக் கொண்டு ஒரு சிலர் செய்த சுயநல காரியம்" என்று எழுதினார்.

1965ல் "காங்கிரஸ், ஜாதியை ஒழிக்கிறது. பணக்காரர்களை ஒழிக்கிறது. அப்படிப்பட்ட காங்கிரஸை ஒழ¤க்க தி.மு.க. விபீஷணராக இருக்கிறது" என்று விஷத்தைக் கக்கினார் ஈ.வெ.ரா.

இதே பாணியில் தி.மு.க. மீது ஈ.வெ.ரா. நடத்திய அக்னி அபிஷேகம் 18 வருடங்களாகத் தொடர்ந்தது. இதெல்லாம் சரி, ஈ.வெ.ரா. பற்றி எம்.ஜி.ஆர். என்ன சொன்னார் என்பதையும் தமிழர்களுக்குச் சொல்ல வேண்டுமல்லவா?

எம்.ஜி.ஆர். நடித்து இயக்கிய திரைப்படம் நாடோடி மன்னன். அதில் வில்லன், தன்னுடைய மகளையே ஆசைப்பட்டு திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்பார். மகள் அதை மறுத்துவிடுவார் என்பதாக ஒரு காட்சி இருந்தது.

ஈ.வெ.ரா. — மணியம்மை திருமணத்தை இடித்துக்காட்டும் படியான காட்சியைத் தன்னுடைய திரைப்படத்தில் அமைத்தார் எம்.ஜி.ஆர். என்பதைப் பதிவு செய்துகொள்ள வேண்டும்.

பெரும்பாலான கழகக்காரர்களின் வெறுப்பை பரிபூரணமாக சம்பாதித்தது ஈ.வெ.ரா. —மணியம்மை திருமணம்.

அதையடுத்து வெளியேறிய அண்ணாதுரையும் மற்றவர்களும் உண்டாக்கிய அமைப்பு திராவிட முன்னேற்ற கழகம். நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். புதிய அமைப்பின் பெயர் திராவிட முன்னேற்றக் கழகம் என்பதே. திராவிடர் முன்னேற்ற கழகம் அல்ல என்பது முக்கியமான விஷயம். தங்களுடைய அமைப்பு, இன பேதம் கொண்டது அல்ல என்று அண்ணாதுரை விளக்கம் அளித்தார். இந்தத் தகவலையெல்லாம் இன்றைய தி.மு.க.வினர் அறியாதபடி கருணாநிதி மறைத்துவிட்டார்.

திராவிடர் முன்னேற்றக் கழகம் என்று கூறும்போது அதில் திராவிடர்கள் மட்டும் அரண் எழுப்புவதாக அமைந்து விடுகிறது. இப்போதுள்ள உலக சூழ்நிலைக்கு, காலப்போக்கிற்கு இது உகந்ததாக எனக்குப் படவில்லை. இந்த மண்ணுக்கு நன்றியுள்ளவர்களாக நடந்துகொள்ளும் எந்த இனத்தவரும் இன்னலின்றி இன்ப வாழ்வு வாழப் பணியாற்றுவதே நம் கட்சியின் லட்சியமாக இருக்க வேண்டும். இங்கே திராவிடரும் வாழலாம், ஆரியரும் வாழலாம், கிறிஸ்தவரும் வாழலாம், முகமதியரும் வாழலாம் என்று பரந்த நோக்கத்தோடு நாம் பணியாற்ற வேண்டும்.

**“திராவிடர் கழகம் போல இன நலனுக்காக மட்டும் போராடாமல், பூகோள அடிப்படையில் திராவிடம் முழுமைக்கும் நன்மைகள் உண்டாக — முன்னேற்றம் காண நாம் பாடுபட வேண்டியிருப்பதால் ‘திராவிட முன்னேற்றக் கழகம்’ என்று நம் கட்சிக்குப் பெயர் இருப்பதே எல்லாவகையிலும் பொருத்தம் என்பது என் தாழ்மையான எண்ணம்”** என்றார் அண்ணாதுரை.

இந்தியர்களை ஆரியர், திராவிடர் என்று இரண்டு இனங்களாகப் பிரித்துக் காட்டி, இரண்டு இனங்களுக்கிடையே பரம்பரையாகப் பகை இருப்பதாக ஜோடித்து, அந்த அறிவுமயக்கத்தில் நம்மை ஆழ்த்திவிட்டு தன்னுடைய சுரண்டலுக்கு வழி செய்து கொண்டது ஆங்கிலேயே அரசு.

அந்த வேலைக்குத் துணை நின்றதும் அவர்களுடைய இனபேதத்துக்குத் தூபம் போட்டதும்தான் ஈ.வெ.ரா.வின் தலையாயப் பணி. தி.மு.க.வின் முதல் நடவடிக்கையே இன்னும் சொல்லப்போனால் தி.மு.க.வின் பெயர் சூட்டலிலேயே இந்த இனவாதத்துக்கு ஆப்பு வைக்கப்பட்டது.

தேர்தலில் நிற்கக்கூடாது என்பது ஈ.வெ.ரா.வின் கட்டளை. தி.மு.க.வினர் அதையும் மதிக்கவில்லை. 1957ம் ஆண்டு பொதுத் தேர்தலில் தி.மு.க. போட்டியிட்டது. அந்தக் கடுப்பில் காங்கிரசுக்கு ஆதரவாகப் பிரசாரம் செய்தார் ஈ.வெ.ரா. 124 இடங்களில் போட்டியிட்டு 15 இடங்களில் வெற்றி பெற்றது தி.மு.க. கடவுள் இல்லை என்று கதறியவர் ஈ.வெ.ரா. அதுவும் ஹிந்துக் கடவுளுக்கு எதிராக ஓவராகக் கூவுவது அவருடைய வழக்கம். அவரிடமிருந்து விடுதலை பெற்று வந்த அண்ணாதுரையின் கருத்து என்ன? அவர் ஸ்தாபித்த தி.மு.க.வின் கடவுள் கொள்கை என்ன என்று பார்ப்போமா?

**‘சிகாகோ டெய்லி ட்ரிப்யூன்’** என்ற அமெரிக்க நாளிதழின் நிருபர் பிரீடன்பர்க், சி.என்.அண்ணாதுரையைப் பேட்டி கண்டார். (09.10.1958)

நிருபர்: ஒரு கடவுள் இருக்கிறார் என்பதை நீங்கள் நம்புகிறீர்களா?

# 4. ஆழ்வார் பாசுரமும் ஆட்சிக்கு ஆசியும்

அமெரிக்க நாளிதழின் நிருபர் கேட்ட கேள்விக்கு அண்ணாதுரை அளித்த பதில் (09.10.1958)

அண்ணாதுரை: “நமது கருத்துக்கு எட்டாத ஒரு பெரிய சக்தி இருக்கிறது என்பதை ஒப்புக்கொள்கிறோம்”

நிருபர் கேட்ட மற்றொரு கேள்வி: “தி.மு.க. ஏன் துவங்கப்பட்டது”?

அண்ணாதுரை: “திராவிடர் கழகத்துக்கு ஜனநாயகக¢ கோட்பாட்டிலும் நடைமுறையிலும் நம்பிக்கை இல்லை. கட்சி அமைப்பிலும், ஜனநாயக அமைப்பிலும் அது ஜனநாயகத்தை ஏற்றுக்கொள்ள மறுத்தது. எங்களுக்கும் அவர்களுக்கும் இடையே இருக்கின்ற மற்றொரு முக்கிய வேறுபாடு ஜாதிப் பிரச்சனையைப் பொறுத்தது. அவர்கள் பார்ப்பனர்களை அடியோடு அழிக்க வேண்டும் அல்லது அவர்களை இந்த நாட்டை விட்டே துரத்த வேண்டும் என்றார்கள். நாங்கள் அந்தக் கருத்தை ஏற்கவில்லை” என்றார் அவர்.

இதுமட்டுமல்ல, தி.மு.க.வின் மயிலை கிளையில் பொறுப்பில் இருந்த ராமசாமி என்பவர் ‘நாத்திகம்’ என்ற இதழைத் துவக்கிய போது தங்களுக்கும் அந்த இதழுக்கும் தொடர்பு இல்லை என்று தி.மு.க. தலைமை நிலையம் அறிவித்தது. (30.11.1958)

1962 தேர்தலில் அண்ணாதுரை காஞ்சிபுரம் தொகுதியில் போட்டியிட்டார். அப்போது பிரசாரக் கூட்டத்தில் பேசும்போது,

“என்னுடைய அரசியல் வாழ்க்கையில் நான் யாரை தந்தையாகக் கருதினேனோ அவர் என்னுடைய அரசியல் வாழ்க்கையில் ஆதரவு தரவில்லை. யாரை நான் கண்டபடி பேசினேனோ அவர் என்னை ஆதரிக்கிறார்” என்று ராஜாஜியைப் பற்றிச் சொல்லி மேடையில் கண்கலங்கினார்.

1963ல் சென்னை, கோகலே அரங்கில் நடைபெற்ற கூட்டத்தில் ராஜாஜியும் அண்ணாதுரையும் கலந்துகொண்டனர். அந்த கூட்டத்தில் பேசிய அண்ணாதுரை,

“டெல்லியில் நமக்கு கௌரவமும் புகழும் கிடைப்பதற்கு ராஜாஜிதான் காரணம். இதை வீணாக்கக் கூடாது” என்று பேசினார். தி.மு.க.வுக்கும் ராஜாஜிக்கும் உள்ள உறவு வலுப்பட்டு 1967 தேர்தலில் கூட்டணியாக உருவெடுத்தது. இந்த கூட்டணியை ஆதரித்து கல்கி இதழில் ராஜாஜி எழுதிய தலையங்கத்தில், நம்மாழ்வார் பாசுரத்தை எடுத்துக்காட்டி இருந்தார். நாம் இறைவனின் பிரதிநிதி என்று நினைத்து அடக்கத்தோடு ஆட்சி செய்ய வேண்டும். அதை காங்கிரஸ் கட்சி செய்யவில்லை என்று எழுதினார் ராஜாஜி. கடவுளை மறுக்கும் தலைவரின் இயக்கத்தில் பயிற்சி பெற்றவர்களுக்கு ஆதரவாக நம்மாழ்வாரின் பாசுரம் பயன்பட்டது காலத்தின் கோலம்தான்.

தி.மு.க.வுக்கும் ராஜாஜிக்கும் உள்ள உறவு வலுவாகிக் கொண்டே வருவது ஈ.வெ.ரா.வுக்கு ரசிக்கவில்லை. அவர் தொடர்ந்து கடுமையான பிரயோகங்களை உபயோகித்தார்.

இதற்கிடையே தி.மு.க. ஆதரவு நடிகரான எம்.ஜி.ஆர். திரையுலகில் முன்னேறி முதலிடத்தை நெருங்கிக் கொண்டிருந்தார். எம்.ஜி.ஆரின் திரைப்படங்களில் ஈ.வெ.ராவின் கோட்பாடுகளுக்கு நேர்எதிரான விஷயங்கள் இடம் பிடித்தன.

இந்தச் சூழ்நிலையில் (1963), தேசிய நீரோட்டத்தின் முக்கியமான பணி ஒன்றில் கலந்து கொள்வதற்கு தி.மு.க.வினருக்கு வாய்ப்பு கிடைத்தது. அந்த வாய்ப்பை உருவாக்கியவர் ஏக்நாத் ரானடே, விவேகானந்தர் பாறை நினைவுச்சின்னத்தை ஏற்படுத்த முயற்சி செய்தவர் இவர். தி.மு.க. தலைமையோடு இவர் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டது பற்றி அவரே சொல்கிறார்.

“திரு.அண்ணாதுரை, சுவாமி விவேகானந்தர் மீது மிகுந்த பற்று கொண்டவர் என்பது நான் புதியதாக அறிந்த உண்மை. இதை முன்பே நான் அறிந்திருக்கவில்லை”.

# 5. “விவேகானந்தர் மகா புருஷர்” : அண்ணாதுரை

கன்னியாகுமரியில் விவேகானந்தர் நினைவுப் பாறையை அமைக்க முயற்சி செய்தார் திரு.ஏக்நாத் ரானடே. இது தொடர்பாக அவர் தி.மு.க. தலைவர் அண்ணாதுரையைச் சந்தித்தார் (1963).

இது பற்றி அவரே எழுதுகிறார்:

“பாரபட்சமின்றி எல்லோரையும் சந்தித்து ஆதரவு திரட்ட வேண்டும் என்ற எனது நோக்கத்தின் அடிப்படையில் திரு.அண்ணாதுரையை சந்திக்க நேரம் கேட்டேன். அப்போது தி.மு.க. ஆட்சியில் இல்லை. எதிரணியில் இருந்தது. திரு.நெடுஞ்செழியன் பேட்டிக்கு ஏற்பாடு செய்திருந்தார். அவர் ஒரு சிறந்த அறிவாளி. தி.மு.க.வினரோடு முதன் முதலாக எனக்குத் தொடர்பு ஏற்பட்டது, திரு.நெடுஞ்செழியனுடன்தான். அவர் பிள்ளையார் கோவில் தெருவிலுள்ள நமது விவேகானந்தப் பாறை நினைவாலயக் கமிட்டி அலுவலகத்தின் அருகில் வசித்து வந்தார். இப்பகுதி அவரது தொகுதிக்குட்பட்டது. எனவே நட்பு நாடி அவரது இல்லத்திற்குச் சென்றிருந்தேன். ஒன்று அல்லது இரண்டு தடவைகள் அவரைச் சந்தித்தேன். அவர் விசாலமான எண்ணம் கொண்டவர். பழக இனிமையானவர்.

திரு.அண்ணாதுரையைச் சந்திக்க நான் அவருடைய உதவியை நாடினேன். அவரும் உதவ உறுதி அளித்தார். ஒரு குறிப்பிட்ட இடத்தைக் கூறி “நீங்கள் அங்கு வாருங்கள். அங்கு எங்களுடைய கூட்டம் நடக்கவிருக்கிறது. திரு.அண்ணாதுரையும் அங்கு இருப்பார். நானும் கூட்டத்தில் கலந்து கொள்கிறேன். வந்ததும் எனக்கு ஒரு குறிப்பு அனுப்புங்கள். நான் சந்திப்புக்கு ஏற்பாடு செய்கிறேன்” என்றார். யாருடைய வீட்டில் கூட்டம் நடந்து கொண்டிருந்தது என்று எனக்கு இப்போது நினைவில்லை. நான் திரு.அண்ணாதுரை முன்னிலையில் அழைத்துச் செல்லப்பட்டேன். அங்கு எல்லோரும் நாம்

அமர்ந்திருப்பதுபோல் அரை வட்டமாக நாற்காலிகளில் அமர்ந்திருந்தனர். செய்தித்தாள்களில் நாம் யாரைப் பற்றியெல்லாம் படித்துக்கொண்டிருக்கிறோமோ திரு.கருணாநிதி உட்பட அனைவரும் இருந்தனர். அவர் என்னை அன்போடு அழைத்து அருகில் உட்கார வைத்து "உங்களுக்கு நான் என்ன செய்ய வேண்டும்" என்று கேட்டார். ஒரு நினைவுச் சின்னம் எழுப்பப்பட வேண்டும் என்ற திட்டத்தைத் தவிர எதுவும் இல்லை. திட்டத்தைப் பற்றிக் கூறினேன். அதை அவர் வரவேற்றார். "விவேகானந்தர் ஒரு மஹா புருஷர். உண்மையிலேயே நம் நாடு அவரிடம் மிகவும் கடமைப்பட்டுள்ளது. யாரையாவது நாங்கள் ஏற்றுக்கொண்டிருக்கிறோம் என்றால் அது விவேகானந்தரைத்தான். அவருடைய சிந்தனை, அவருடய கருத்துக்கள் எல்லாம் மிக மிக சுதந்திரமானவை. எல்லோராலும் ஏற்றுக்கொள்ளக் கூடியவை. நாட்டிற்குக் களங்கமில்லாத தோற்றத்தைத் தருபவை. விவேகானந்தரைப் பின்பற்றினால் நாம் நன்றாக வாழ முடியும்" என்றார். இவ்வாறு கூறிவிட்டு, "என்னிடமிருந்து என்ன விரும்புகிறீர்கள்?" எள்றார். "தமிழ்நாடு மாநில பாறை நினைவுச்சின்ன குழு ஒன்று அமைக்கப்பட வேண்டும். தலைவர் ஏற்கனவே இருக்கிறார். உதவித் தலைவர் ஒருவர் எங்களுக்கு வேண்டும். எனவே தாங்கள் உதவித் தலைவர்களுள் ஒருவராக இருப்பதை நாங்கள் விரும்புகிறோம்" என்றேன்.

"நான் நாடாளுமன்ற உறுப்பினன். நான் மாநிலக் குழுவிற்கு உதவித் தலைவராக ஆவதால் என்ன பயன்? நான் பெரும்பாலும் டெல்லியில்தான் தங்குகிறேன். எனவே திரு.நெடுஞ்செழியனை உதவித் தலைவராகப் பொறுப்பு வகிக்கும்படி கூறுங்களேன். அவர் உதவித் தலைவர் பதவிக்குத் தகுதியானவர். எனவே அவரை மாநிலக் கமிட்டிக்கு உதவித் தலைவராக்குங்கள்" என்றார்.

நான் உடனேயே "உங்கள் தோழர்களில் ஒருவராகிய அவர் உதவித் தலைவராகப் பொறுப்பு வகிக்க வேண்டும் என்ற தாங்கள் குறிப்பிட்டால், நீங்களே உதவித் தலைவராக இருப்பதாகக் கருதுவோம்" என்றேன். "இனியும் என்ன வேண்டும்?" என்றார்.

“மேலும் ஒரு விஷயம். தாங்கள் கூடுதல் நாட்கள் டெல்லியில் வசிக்கிறீர்கள். எனவே தங்களுடைய உறவும் எங்களுக்கு வேண்டும். எங்களுடைய பொதுக்குழு, நாட்டிலுள்ள பல பகுதிகளில் இருப்பவர்களைக் கொண்டது. எனவே பொதுக் குழுவில் ஒரு உறுப்பினராக ஆவதற்கு தங்களுக்கு எந்த ஆட்சேபணையும் இருக்காது” என்றேன். “சரி, என்னுடைய பெயரை வைத்துக்கொள்ளுங்கள். பொதுக்குழு உறுப்பினர்களுள் ஒருவராக இருப்பதில் மகிழ்ச்சி அடைவேன்” என்றார் அவர்.

திரு.அண்ணாதுரையின் பங்கேற்பினால் தி.மு.க.வின் நாடாளுமன்ற உறுப்பினர்கள் பிரதமரிடம் கொடுக்கப்பட்ட விண்ணப்பத்தில் கையொப்பமிட்டனர் என்கிறார் ரானடே.

# 6. "நான் மதவாதி" — அண்ணாதுரை

கன்னியாகுமரியில் எழுந்துள்ள விவேகானந்தர் நினைவுப் பாறையை அமைக்க முயற்சி செய்தவர் ஏக்நாத் ரானடே. இவர் இதற்கு ஆதரவு தேடி தி.மு.க. தலைவர் திரு.அண்ணாதுரையைச் சந்தித்தார். இது குறித்து மத்திய அரசுக்கு அளிக்கப்பட்ட விண்ணப்பத்தில் தி.மு.க.வின் நாடாளுமன்ற உறுப்பினர்கள் இ.மனோகரன், க,ராசாராம், மி.சிவசங்கரன், டி.டி.ராமபத்திரன் கையெழுத்திட்டனர்.

விவேகானந்தர் பாறை நிறுவுவதற்காக ஒத்துழைத்த அண்ணாதுரையின் தி.மு.க.வோடு, மகளுக்காக விவேகானந்தர் இல்லத்தைப் பயன்படுத்த முயன்ற கருணாநிதியின் தி.மு.க.வை ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ளலாம்.

அண்ணாதுரை, ஏக்நாத் ரானடே சந்திப்புக்குப் பிறகு நான்கு ஆண்டுகளில் தி.மு.க. வளர்ச்சி அடைந்தது, 1967 தேர்தலில அண்ணாதுரை தமிழக முதல்வராக ஆனார். முதல்வராக இருந்த அண்ணாதுரைக்கு காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கத்தின் அழைப்பு வந்தது. தமிழ்க்கடல் ராய.சொக்கலிங்கம் அழைத்திருந்தார். அழைப்பை ஏற்று அண்ணாதுரை விழாவில் கலந்துகொண்டு உரையாற்றினார். (09.09.1967).

அண்ணாதுரையினுடைய கடவுள் கொள்கை பற்றியும் ஹிந்து மதம் பற்றிய அவருடைய பார்வையையும் அறிய விரும்புகிறவர்களுக்கு இது முக்கியமான சான்றாக அமைந்துள்ளது. அண்ணாதுரை சொல்கிறார்:

"இந்த மன்றம் 50 ஆண்டுகளாக நடைபெற்றுக் கொண்டு வருவதால் நம்முடைய தமிழகத்தின் தனிச் சிறப்பை அது தனக்குத் தேடிக் கொண்டிருக்கிறது என்பதனை மெய்ப்பித்துக் காட்டுகிறது.

"தமிழகத்திலே உள்ளவர்கள் சங்கங்களையும் மன்றங்களையும் தொடங்குவதில் வல்லவர்கள். ஆனால், தொடர்ந்து நடத்துவதில் அவர்கள் அந்த அளவிற்கு வெற்றி கண்டதில்லை. ஓராண்டு

ஈராண்டிற்குள் அந்த மன்றங்களும் சங்கங்களும் பிளவுபட்டுப் பல்வேறு வகையாக திசைதிரும்பிப் பாழ்பட்டுப் போய் இருப்பதைத் தமிழகத்தில் நாம் பார்த்திருக்கிறோம். ஆனால், இந்த மன்றம் 50 ஆண்டுகளாகத் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. நம்முடைய ராய.சொ. அவர்கள் எடுத்துச் சொன்னபடி, மிகப் பெரியவர்கள், நாட்டினுடைய வரலாற்றிலே பொறிக்கத்தக்க நற்செயல்களைச் செய்தவர்கள், பெரும் புலமை பெற்றவர்கள், சிறந்த கவிஞர்கள் இவர்கள் எல்லாம் இந்த மன்றத்திற்கு வந்திருக்கிறார்கள் என்று அவர்கள் குறிப்பிட்டார்கள். இவ்வளவு பேர் வந்து சேர்ந்த இடத்தில் அப்படி ஒரு பூங்காவில் அவர்களும் அரசிளங்குமாரிகளும், அரசிளங்குமாரர்களும் உலாவினாலும் ஒவ்வொரு வேளையிலே காவல்காரன் நுழைவதைப் போல் அவ்வளவு பெரியவர்களும் வந்து சேர்ந்த இடத்திற்கு நானும் வருவதற்கு வாய்ப்புக் கிடைத்ததில் மிக்க மகிழ்ச்சி அடைகின்றேன்''.

``ஆனால், ஒரு பூங்காவில் அரசர்களும் அரசிளங்குமாரர்களும் மட்டுமல்ல, சிற்சில வேளைகளில் காவல்காரன் வந்து போவது பூங்காவுக்கே கூட நல்லது. ஆகையினால்தான் இதிலே நான் கலந்து கொள்ள வேண்டும் என்று ராய.சொ. விரும்பினார்கள் என்று நான் கருதுகிறேன்.

அவர்கள், 'அண்ணாதுரை மதத்திற்கு அப்பாற்பட்டவராக இருக்க முடியாது' என்று குறிப்பிட்டார்கள்.

சில வேளைகளில் மதத்திற்கு மனிதன் அப்பாற்பட்டவராக இருக்கிறானா என்பதை விட, மனிதனுக்கு அப்பாற்பட்டு மதம் இருக்கிறது என்பதுதான் இன்று இருக்கும் மிக முக்கியமான பிரச்சினைகளில் ஒன்று.

மனதிற்கு அப்பாற்பட்டு மனித உணர்ச்சிகளை மதியாமல், மனித குலத்திற்கு ஏற்படுகின்ற பிரச்சினைகளைத் தீர்க்காமல், மனித குலத்திலே தோன்றுகின்ற வேற்றுமைகளைக் களையாமல், மனிதர்களின் மனதிலே தோன்றுகின்ற மாசுகளைத் துடைக்காமல்

இருக்குமானால், மனிதனுக்கு மாண்பு அளிக்காமல் ஒரு மதம் இருக்குமானால் அப்படிப்பட்ட மதத்தை மனித குலத்திற்கு அப்பாற்பட்ட மதம் என்று நாம் சொல்லலாம்.

அப்படி சில மதங்கள் காபாலிக மதத்தைப் போன்றவைகள் தமிழகத்திலே இருந்து வந்தன என்பதையும் இந்தியாவில் இருந்து வந்தன என்பதையும் வரலாறு நமக்கு உணர்த்துகிறது.

மதம் என்று சொல்கின்ற நேரத்தில் மக்களுக்கு ஒரு ஒழுக்க முறையை, ஒரு குறிக்கோளை, ஒரு லட்சியத்தை, ஒரு வாழ்வுமுறையை அது அமைத்துத் தருவதென்றால் நான் முழுக்க முழுக்க மதவாதி.

மதம் என்பது மக்களைச் சாதிகளாகவும் குலங்களாகவும் கோத்திரங்களாகவும் பிளவுபடுத்தி ஒருவருக்கொருவர் பார்க்கக் கூடாது, தீண்டுவது கூடாது, ஒருவருக்கொருவர் கலந்து உரையாடக்கூடாது என்பதுதான் மதம் என்றால் என்னைவிட மதத்திற்கு விரோதியாக யாரும் இருக்க முடியாது.

இந்த இரண்டிலே எம் மதம் இவர்கள் மதம் என்பதைப் பொறுத்து, நான் இவர்கள் நண்பனா, பகைவனா என்பது அதிலே அடங்கியிருக்கிறது.

ஆனால் உள்ளபடி நான் அறிந்தவரையில், எந்த மதமாக இருந்தாலும் அதைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கின்ற கருத்துக்கள், ஏடுகளிலே குறிக்கப்பட்டிருக்கின்ற தத்துவங்கள், அவைகளுக்குப் பெரியவர்கள் தருகின்ற விளக்கங்கள் இவைகளில் ஒன்றைக்கூட யாரும் மறுத்துவிடுவதற்கு இல்லை. ஆனால், நடைமுறையிலே வருகின்ற நேரத்தில், தந்த விளக்கத்திற்கு ஏற்ற அளவிற்கு நடைமுறை இருக்கிறதா என்ற கேள்வி எழுகின்ற நேரத்தில்தான் பெருமூச்சு விட வேண்டியிருக்கிறது. இவ்வளவு சிறந்த தத்துவங்கள் எவ்வளவு அரிய விளக்கங்கள். ஆனால், அவைகள் எவ்வளவு எளிதாக மறைக்கப்பட்டுப் போய்விட்டன என்பதை எண்ணிப் பார்க்க

வேண்டிய நேரத்திலேதான் நாம் பெருத்த கவலைக்கு உள்ளாக வேண்டியவர்களாக இருக்கிறோம்".

ஈ.வெ.ரா.வை விட்டு விலகி வந்த அண்ணாதுரையும் அவரது கட்சிக்காரர்களும் இந்த வகயாக கடவுள் மறுப்பையும் ஹிந்து மத எதிர்ப்பையும் கைவிட்டுவிட்டார்கள் என்பதைப் பார்த்தோம்.

# 7. விபூதி பூசிக்கொண்ட அண்ணாதுரை

முதலமைச்சர் சி.என்.அண்ணாதுரை காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கத்தின் பொன் விழாவில் ஆற்றிய உரை:

“நம்முடைய நண்பர் ராய.சொ. அவர்கள் சொன்னபடி நான் மதத்திற்கு அப்பாற்பட்டவன் என்பது அல்ல. சொல்லப் போனால் அதற்கு ஒரு பரிசோதகன் என்று வைத்துக்கொள்ளலாம். எப்படி ஊரில் அசுத்தம் பரவாமல் இருப்பதற்கு ஒரு சானிட்டரி இன்ஸ்பெக்டர் தேவையோ, அதைப்போல எண்ணங்களில், ஏற்பாடுகளில் அழுக்கு ஏறாமல் இருக்க வேண்டுமானால், அது எவ்வளவு அறிவுடையவராக இருந்தாலும், நமது நாடு எவ்வளவு பழமையானதாக இருந்தாலும் அதைச் சரி பார்ப்பதற்கு என்று சிலர் தங்களைத் தாங்களே ஒப்படைத்துக் கொள்வது போல நானும் எனது நண்பர்களும் அந்தக் காரியத்தில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறோம்.

சில வேளைகளில் அழுக்கு எடுக்கும் காரியங்களில் ஈடுபடுகின்றபோது பலருக்கு எங்கள் கரத்திலுள்ள அழுக்கு மட்டும்தான் தெரியும். எடுத்து விடுவதாலேயே அந்த பொருளுக்கு அழுக்கு போய்விட்டதை அவர்கள் அறிந்து கொள்ளத் தவறிவிட்டார்கள்.

ஆகையினால்தான் மதத்திற்கு அப்பாற்பட்டவர்கள் என்பதைவிட மனதில் ஏறிவிட்டிருக்கின்ற கறைகளை, அழுக்குகளைத் துடைப்பதற்காக ஏற்பட்டிருக்கின்ற துப்புரவாளன் என்ற முறையில் நீங்கள் கருத வேண்டும் என்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

ராமகிருஷ்ண பரமஹம்சரும் விவேகானந்தரும் மதத்தைத் துப்புரவுப்படுத்த விரும்பினார்கள். விவேகானந்தரைவிட இந்த மதத்தைத் துப்புரவாக்குவதற்கு முயற்சியெடுத்தவர்கள் வேறு எவருமில்லை என்று தைரியமாகச் சொல்லலாம். மதத்தில் ஏறிவிட்டிருந்த கறைகளை நீக்குவதற்கு மிக தைரியமாக, மிக துணிச்சலாக அவர்கள் ஈடுபட்டவர்கள்” என்றார் அண்ணாதுரை.

ஹிந்து மதமே கூடாது என்று சொல்கிற ஈ.வெ.ரா.வின் கொள்கைகளிலிருந்து அண்ணாத்துரையும் அவருடைய தம்பிமார்களும் வெகுதூரம் விலகி வந்துவிட்டார்கள் என்பதையே இந்த உரை காட்டுகிறது. அதுமட்டுமல்ல, துறவிகளைத் துச்சமென மதிக்கின்ற பழக்கமும் ஈ.வெ.ரா.வுக்கு இருந்தது. முதலமைச்சர் அண்ணாதுரை இதிலும் மாறுபட்டிருந்தார். சமண சமயத் துறவியான ஆச்சார்ய துளசி அவர்களுக்கு வரவேற்பு அளிக்கப்பட்ட போது அதில் அண்ணாதுரை கலந்து கொண்டார். பிராமண எதிர்ப்பும் வகுப்பு வாரி இடஒதுக்கீடும் திராவிடர் கழகத்தின் நங்கூரக் கொள்கைகள். அதையும் கொஞ்சம் அசைத்துப் பார்த்தவர் அண்ணாதுரை. “முற்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர்கள் பொருளாதார ரீதியில் பின் தங்கியிருந்தால் அவர்களுக்கும் இலவசக¢ கல¢வ¤ தரப்பட வேண்டும்” என்று சட்டமன்றத்தில் பேசினார் அண்ணாதுரை (இணைப்பு பக்கம்30).

நல்லபடியாக ஊழல் கறை படியாத அளவில் அண்ணாதுரை ஆட்சி செய்து கொண்டிருந்தபோது அவருடைய உடல்நலம் சீர்கெட்டது. புற்று நோயால் பாதிக்கப்பட்ட அண்ணாதுரை அடையாறு மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார். மருத்துவமனையில் அண்ணாதுரை இருந்தபோது அவரோடு உடன் இருந்த காவல்துறை அதிகாரி வே.ராமநாதன் தன்னுடைய அனுபவங்களைப் பதிவு செய்துள்ளார்.

“புற்று நோயால் அண்ணா துன்புற்றுக் கொண்டிருந்த அவரது கடைசி நாட்களில் பாதுகாப்புப் பணிக்காக அவருடன் அடையாறு கான்சர் மருத்துவமனையில் நான் இருந்தேன். மிக சகஜமாகப் பேசிக் கொண்டிருப்பார். கலைஞர், நாவலர், மதியழகன் போன்ற தலைவர்கள் அண்ணாதுரையைப் பார்க்க வந்துபோய்க் கொண்டிருப்பார்கள். ஒருநாள் தமிழ் அறிஞரும் ஹிந்து மதத்திற்காக உழைத்தவருமான சுத்தானந்த பாரதியார் அண்ணாவைக் காண்பதற்காக மருத்துவமனைக்கு வந்தார். அண்ணா இருந்த நிலையைக் கண்டு கண்கலங்கி நின்றது அந்தக் காவி உடுத்திய உருவம்.

அங்கிருந்த கனத்த மௌனம், அறையின் மூலையிலிருந்த என்னையும் பாதித்தது.

இடுப்பிலிருந்த விபூதிப் பையை எடுத்தார் சுத்தானந்த பாரதியார்.

ஆனால், எடுத்தவருக்குச் சற்றுத் தயக்கம். அண்ணாதுரை கடவுள் மறுப்புக் கொள்கை உடையவராயிற்றே, விபூதி பூசிக்கொள்ள மாட்டாரே என்று அவர் எண்ணியிருக்க வேண்டும். ஆனால் அண்ணா, தன் தலையைத் தூக்கி நெற்றியைக் காண்பித்தார். தயக்கம் நீங்கி சுத்தானந்த பாரதியார் கரம் விபூதியைப் பூசிற்று.

இருவரும் ஒருவரை ஒருவர் சற்று நேரம் அமைதியாகப் பார்த்துக் கொண்டார்கள். எவ்வளவோ விஷயங்களை அவர்கள் பேசாமலேயே பரிமாறிக் கொண்டிருக்க வேண்டும். சுத்தானந்த பாரதியார் கிளம்பிப் போய்விட்டார்.

அதுவரை அமைதியாக இருந்த நான் மெதுவாகக் கேட்டேன். “ஏன் அண்ணா, விபூதியே பூச மாட்டீர்களே இப்போது மட்டும் ஏன் அனுமதித்தீர்கள்?”

அமைதியாக என்னைப் பார்த்தார். எதுவும் பேசவில்லை. எனக்குத்தான் அவசரப்பட்டு கேட்டுவிட்டோமோ என்று தர்மசங்கடமான உணர்வு ஏற்பட்டது என்கிறார் வே.ராமநாதன்.

அண்ணாதுரை 1969 பிப்ரவரி 3 ஆம் நாளில் காலமானார். அதைத் தொடர்ந்து 1969 பிப்ரவரி 10 அன்று மு.கருணாநிதி தமிழக முதலமைச்சராகப் பதவி ஏற்றார்.

Þ¬íð¢¹:



லாமே என்று இப்படிக் கூறுகிறீர்கள். என்னைப் பொறுத்த வரையில் பல காரியங்களைச் செய்யாமல் விட்டுவிடுவேனே தவிர, ஒரு காரியத்தைச் செய்துவிட்டு, பிறகு ஏன் செய்தோம் என்று வருத்தப்பட்டுக்கொள்ள மாட்டேன். ஆகையால்தான் சர்வ வல்லமை பொருந்திய நீங்கள் எப்படி ஹைஸ்கூல் வகுப்புக்கு ஸ்காலர்ஷிப் கொடுப்பதிலே நோட்டம் பார்த்து, நோட்டம் பார்த்து கணக்குப் பார்த்துச் செய்தீர்களோ அந்த முறையைக் கையாள்வது எந்தச் சர்க்காருக்கும் தேவை. அந்தக் கணக்குகளைப் பார்த்து மட்டும் இந்தக் காரியத்தைச் செய்யவில்லை. அதன் அடிப்படையிலே ஒரு சமூகநீதி அடங்கியிருக்கிறது. அதையும் நிதிநிலை அறிக்கையிலே குறிப்பிட்டிருக்கிறேன். சலுகைகள் செய்யப்பட வேண்டுமென்றால், சமுதாயத்திலுள்ள எல்லோருக்கும் அந்தச் சலுகை இருக்கவேண்டுமென்பதை சமூக நீதியாக ஒப்புக்கொள்ள மறுக்கிறேன். சமத்துவம் அல்லவா என்று நீங்கள் வாதாடலாம். நானும் நண்பர் விநாயகமும் சேர்ந்து படிக்கும் போது,

'Equality is not an identity of treatment but the affording of equal opportunities for all" என்று படித்தோம்.

கந்தனுக்குக் கால்படி என்றால், கருணாநிதிக்குக் கால்படி என்று அர்த்தம் அல்ல. கருணாநிதி வயிற்றுக்கு அது போதாது. அதைப் போல செய்கின்ற சலுகைகள், சர்க்கார் மூலமாகக் கிடைக்கின்ற சலுகைகள் ஏற்கெனவே சமுதாயத்தில் வசதியோடு உள்ளவர்களுக்கும் போய்ச் சேர வேண்டும். அதுதான் சமத்துவம் என்று யாராவது சொல்வார்களானால், அந்த சமத்துவத்தைப்பற்றி, அதனுடைய இலக்கணத்தைப் பற்றி மறுபடியும் படிக்க வேண்டுமென்று நான் பணிவோடு கேட்டுக்கொள்கிறேன். அந்த சமூக நீதியின் அடிப்படையிலேதான் எல்லோருக்கும் இலவசக் கல்வி என்று சொல்லவில்லை. அதற்கு அதிகப் பணம்கூட செலவாகவில்லை. 50 லட்சம் ரூபாய்க்குக் குறைவுதான் என்று கூறப்படுகிறது. இதில் தொகை அல்ல முக்கியம், தொக்கியிருக்கிற சமூக நீதி முக்கியம். கட்டணம் செலுத்தக் கூடிய வசதியுள்ளவர்கள் கட்டணம் செலுத்த வேண்டும். செலுத்த வசதியில்லாதவர்களுக்குத்தான் சர்க்கார் துணை நிற்கவேண்டும். சமூகத்தில் நலிந்தவர்களுக்கும், மெலிந்தவர்களுக்கும் ஊட்டமளித்து, வசதி உள்ளவர்கள் தங்களுடைய ஊட்டத்தை தாங்களே பெற்றுக்கொள்ளக்கூடிய முறையில் வழி வகுக்கவேண்டுமென்ற முறையில்தான் பி.யு.சி. வகுப்பில் 1,500 ரூபாய்க்கும் அதற்குக் குறைவாக வருமானம் இருப்பவர்களுக்கு கல்வி இலவசமாக இருக்கட்டும் என்று சொன்னோம். இதிலே, முற்போக்கு சமூகத்திலேகூட ஏழைகள் இருக்கிறார்கள் என்பதை இந்த மன்றத்திலேயும், வெளியிலேயும் பலமுறை பேசியிருக்கிறோம். ஆனால், நீங்கள் துணிந்து காரியத்தில் செய்ய முன்வரவில்லை. நாங்கள் துணிகரமாக இதைச் செய்திருக்கிறோம். புதுமை இல்லையா என்றால் இதுதான் புதுமை. புரட்சி இல்லையா என்றால், இதுதான் புரட்சி. புரட்சி, புரட்சி என்கிறீர்களே இதுதான் புரட்சி.

# 8. கருணாநிதி, எம்.ஜி.ஆர். பகிரங்க மோதல்

கருணாநிதி முதலமைச்சராவதற்கு முக்கியமான காரணம் எம்.ஜி.ஆரின் சிபாரிசு. தி.மு.க.வின் உயர்மட்டத்திலும் தொண்டர்களிடத்திலும் தனக்கிருந்த செல்வாக்கைப¢ பிரயோகித்து கருணாநிதி முதலமைச்சராகும்படி எம்.ஜி.ஆர். செய்துவிட்டார்.

ஆனால் நன்றி என்பது கருணாநிதியின் அகராதியில் எப்போதோ அகற்றப்பட்ட வார்த்தை. கருணாநிதி எம்.ஜி.ஆருக்கு எதிராகக் காய் நகர்த்தத் தொடங்கினார்.

முதலமைச்சராக மு.கருணாநிதி தேர்வு செய்யப்பட்ட காவலத்தில் திரைப்பட உலகத்தில், எம்.ஜி.ஆர். வெற்றிகளைக் குவித்திருந்தார். எங்க வீட்டுப் பிள்ளை என்ற திரைப்படம் ஓடியது 25 வாரங்கள். அதற்கடுத்த அடிமைப் பெண் ஓடியது 25 வாரங்கள். 1970இல் வெளிவந்த மாட்டுக்கார வேலன் திரைப்படம் வெற்றியைக் குவித்தது. திரைப்பட உலகத்தில் முதல்நபர் என்ற இடத்தைத¢ தொடர்ந்து எம்.ஜி.ஆர். தக்கவைத்துக் கொண்டிருந்தார்.

இதெல்லாம் கருணாநிதியின் வயிற்றெரிச்சலைக் கிளப்பியது. ஆட்சியும் அதிகாரமும் தன் வசம் இருப்பது போதாது என்பது அவர் எண்ணம். கலை உலகத்தையும் தன்னுடைய கைப்பிடிக்குள் கொண்டுவர வேண்டும் என்பது அவருடைய ஆசை. புலியைப் பார்த்து பூனை சூடு போட்டுக் கொண்ட கதையாக எம்.ஜி.ஆருக்கு நிகராக ஒரு கதாநாயகனைத் தயார் செய்துவிடலாம் என்பது கருணாநிதியின் திட்டம். தன்னுடைய மகன் மு.க.முத்துவை திரைப்படக¢ கதாநாயகனாக ஆக்கிவிட்டால் மு.க.முத்துவுக்கும் ரசிகர் கூட்டத்தை உருவாக்கிவிட்டால் அதிகார உலகம், கலை உலகம் இரண்டையும் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்துவிட்டால் எம்.ஜி.ஆரின் தயவு தனக்குத் தேவைப்படாது என்று நினைத்துச் செயல்பட்டார் கருணாநிதி.

மு.கருணாநிதியின் மகன் மு.க.முத்து நடித்த "பிள்ளையோ பிள்ளை" என்ற திரைப்படம் இந்தச்சூழ்நிலையில் வெளியானது. படத்துக்கு வசனம் எழுதியவர் முதலமைச்சர் மு.கருணாநிதி. ஏற்கனவே நடிக்கின்ற காரணத்தினால் அமைச்சராக முடியாது என்று சொல்லி எம்.ஜி.ஆரைத் தடுத்திருந்தார் கருணாநிதி. சினிமாவில் நடிப்பவர் அமைச்சராவதற்கு சட்டத்தில் இடமில்லை என்றால், வசனம் எழுதுகிறவர் மட்டும் முதலமைச்சராக முடியுமா என்ற கேள்வியைக் கருணாநிதியிடம் கேட்பார் இல்லை. அதுதான் கருணாநிதி பிராண்ட் ஜனநாயகம்.

தொடர்ந்து கருணாநிதி செய்த சில சில்மிஷங்களை எம்.ஜி.ஆர். நேரடியாக எதிர்கொண்டார். சென்னையில் நடந்த பொதுக்கூட்டத்தில் எம்.ஜி.ஆர். பேசிய பேச்சு கருணாநிதியின் கற்பனைகள் மேல் இடியாய் விழுந்தது. கருணாநிதி ஆட்சியில் ஊழல் மிகுந்துவிட்டது என்று பகிரங்கமாக எம்.ஜி.ஆர். குற்றம் சாட்டினார். சென்னை ராயப்பேட்டையில் நடந்த பொதுக்கூட்டத்தில் (08.01.1972) பேசினார் எம்.ஜி.ஆர்.

“எம்.ஜி.ஆர் என்றால் தி.மு.க., தி.மு.க. என்றால் எம்.ஜி.ஆர் என்று சொன்னேன். உடனே ஒருவர் நாங்களெல்லாம் தி.மு.க இல்லையா? என்று கேட்டார். நான் சொல்கிறேன் நீயும் சொல்லேன். உனக்கும் உரிமை இருக்கிறது எனக்கும் உரிமை இருக்கிறது. உனக்குத் துணிவு இல்லாததால் என்னைக் கோழை ஆக்காதே.

“மந்திரிகள், சட்டமன்ற, நாடாளுமன்ற உறுப்பினர்கள் கணக்கு காட்ட வேண்டும் என்று சொல்கிறோம். கணக்கு அங்கே காட்டிக் கொண்டிருக்கிறோம். ஆனால், இவர்களின் சொந்தக்காரர்களுக்கு எவ்வளவு சொத்து இருக்கிறது என்ற கணக்கை திமுக கழகப் பொதுக்குழு ஏன் கேட்கக் கூடாது”.

“ராமச்சந்திரன் சினிமாவில் நடிக்கிறான். சம்பாதிக்கிறான். நீ சம்பாதித்தால் கணக்கு காட்டு. இதை எதிர்க்கட்சிகள் கேட்க வேண்டியதில்லை. நாமே கேட்டுக்கொள்வோம். இந்தத்

தீர்மானங்களைப் பொதுக்குழுவில் கொண்டு வர இருக்கிறேன். மக்கள் என் பக்கம் இருக்கிறார்கள். பொதுக்குழுவில் இந்தத் தீர்மானத்திற்கு ஆதரவு கிடைக்கவில்லையென்றால் தமிழகம் முழுவதும் இந்தக் கேள்வியைத் தீர்மானமாக உருவாக்குவேன். மக்களைச் சந்திப்பேன்".

"மாவட்டச் செயலாளர்கள், கிளைக்கழகச் செயலாளர்கள், வட்டச் செயலாளர்கள் பதவிகளில் இருப்பவர்கள் குடும்பத்திற்கு வாங்கியிருக்கிற சொத்துக்கள் இருந்தால் கணக்குக் காட்ட வேண்டும். அவை எப்படி வந்தது என்று விளக்கம் சொல்ல வேண்டும்".

"நிரூபிக்க முடியாதவர்களை மக்கள் முன்னால் நிறுத்தி அவர்கள் தவறு செய்திருந்தால் அவர்களை தூக்கியெறிவோம். அண்ணாவின் கொள்கைக்கு ஊறு தேடியவர்களை எல்லாம் மக்கள் முன்னால் நிறுத்தி தூக்கி எறிவோம்" என்றார் எம்.ஜி.ஆர்.

தி.மு.க.வில் ஊழல் மிகுந்துவிட்டது என்று எம்.ஜி.ஆர். பேசிய பேச்சுக்காக கட்சி அவர் மீது என்ன நடவடிக்கை எடுத்தது என்பதையும் இந்த விவகாரத்தில் ஈ.வெ.ரா. எந்தப் பக்கம் இருந்தார் என்பதையும் பார்க்கலாம்.

# 9. அண்ணாதுரை படிப்பாளி, எம்.ஜி.ஆர். பட்டறிவாளி

ஈ.வெ.ரா.வை பொறுத்தவரை அவருக்குத் தத்துவப் பின்புலம் எதுவும் கிடையாது. தரம் குறைந்த வார்த்தைகளால் கடவுளையும் குறிப்பாக ஹிந்து மதக் கடவுளரையும் பிராமணர்களையும் திட்ட வேண்டும் என்பதுதான் அவருடைய போதனைகளின் சுருக்கம்.

அவரிடமிருந்து பிரிந்து வந்த அண்ணாதுரை அப்படிப்பட்டவர் அல்ல. அவர் ஒரு படிப்பாளி. அதுவும் முதலமைச்சராக இருந்தபோது பக்குவமாக நடந்துகொண்டார் என்பதைப் பார்த்தோம். எம்.ஜி.ஆரைப் பொறுத்தவரை அவர் அண்ணாதுரையை முன்னோடியாகக் கொண்டவர்.

வாழ¢க்கையும் வறுமையும் எம்.ஜி.ஆரை ஒரு பண்பட்ட மனிதராக உருவாக்கியிருந்தன. கடவுள், மதம் சம்பந்தப்பட்ட விஷயங்களில் அவர் கடினமான பிரயோகங்களைச் செய்தது இல்லை. பெருமையும் சிறுமையும் நிலையற்றது என்பதை அவர் உணர்ந்தார். தன்னுடைய அனுபவங்களைப் பற்றி அவரே சொல்கிறார்.

'பொம்மை' இதழின் ஆண்டு மலருக்காக செல்வி ஜெயலலிதா எடுத்த பேட்டி: 1968.

கே: சினிமா உலகில் நீங்கள் யாருமே அடைய முடியாத உச்ச நிலைக்குப் போய்விட்டீர்கள்! நீங்கள் விரும்பிய லட்சியத்தை அடைந்துவிட்டோம் என்ற பூரிப்பு உங்களுக்கு ஏற்பட்டிருக்கிறதா?

ப: "எந்த மனிதனும் அவனுடைய வாழ்க்கையில் உச்சநிலைக்குப் போய்விட்டதாக நினைப்பது, தோல்வியான ஒரு சூழ்நிலையில் தோன்றும் திகைப்பேயாகும்".

"பல ஆண்டுகளுக்கு முன்பு சென்னை 'நியூ எல்பின்ஸ்டன்' தியேட்டரில் 'இரு சகோதரர்கள்' என்ற படம் திரையிடப்பட்டது. அதில் கதாநாயகனாக 'இந்திய மேடைப்புலி' என்று பட்டம் பெற்ற

கே.பி.கேசவன் அவர்கள் நடித்திருந்தார். நாடக மேடையிலும் சினிமாவிலும் நடித்து பெரும் புகழ் பெற்றிருந்தார். அவருடன் நானும் வேறு சிலரும் இந்த படத்தைப் பார்க்கச் சென்றிருந்தோம். இடைவேளையின்போது, அவர் வந்திருப்பதை அறிந்த ரசிகர்கள், அவரைப் பார்ப்பதற்காக எழுந்து நின்று அவர் பெயரைக் கூறி கூச்சலிட ஆரம்பித்தார்கள். அந்தப் படத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட மிகச்சிறிய வேடங்களில் நடித்திருந்த நான் இதைக் கண்டு திகைத்து கே.பி.கேசவன் அவர்களையே பார்த்துக் கொண்டிருந்தேன். இத்தனை ஆதரவும் செல்வாக்கும் பெற்றிருக்கும் அவருக்கு அருகில் நாம் அமர்ந்திருக்கிறோமே என்ற பெருமை கூட உண்டாயிற்று”.

“படம் முடிவதற்குள் வெளியே வந்துவிட வேண்டும் என்று நாங்கள் புறப்பட்டோம். அதற்குள் மக்களும் வெளியே வந்துவிட்டனர். நாங்கள் மேலே இருந்து படி இறங்கி கீழே வருவதற்கு கூட சிரமமாகிவிட்டது. நான் மற்றவர்களை பிடித்துத் தள்ளி கே.பி.கே அவர்களை பாதுகாப்பாகக் காப்பாற்றி காருக்கு அழைத்துச் சென்று அனுப்பி வைத்தேன்”.

“அன்று மக்களுக்கு என்னை யார் என்று தெரியாது”.

“அதற்குப் பல ஆண்டுகளுக்குப்பின் சென்னை ‘நியூ குளோப்’ தியேட்டருக்கு நானும் கே.பி.கே. அவர்களும் ஒரு ஆங்கிலப் படம் பார்க்கப் போனோம். அப்போது நான் நடித்த ‘மர்ம யோகி’ திரைப்படம் வெளிவந்து சில மாதங்களே ஆகியிருந்தது. இடைவேளையின்போது நான் வந்திருந்ததை அறிந்த ரசிகர்கள் எழுந்து கூச்சல் போட்டார்கள். எனக்கு அருகில் அதே கே.பி.கே. அவர்கள்தான் அமர்ந்திருந்தார்கள். அவரை யார் என்றே படம் பார்க்க வந்திருந்தவர்கள் தெரிந்துகொள்ளவில்லை”.

“படம் முடிந்து வெளியே வந்தோம். மக்கள் கூட்டம் எங்களைச் சூழ்ந்தது. கே.பி.கே. அவர்கள் அந்த ரசிகர்களிடமிருந்து என்னைக் காப்பாற்றி ஒரு டாக்ஸியில் ஏற்றி அனுப்பினார். நான் புறப்படும்போது

அவரும் அந்த மக்கள் கூட்டத்தில் ஒருவராக நின்றிருந்தார். அவரது நடிப்பாற்றல் எந்த வகையிலும் குறைந்துவிடவில்லை”.

“கலைஞர்களுக்கு உச்சநிலை, தாழ்ந்தநிலை என்பதெல்லாம் மக்களால் தரப்படும் ஒரு மயக்கநிலை. அவ்வளவுதான். கலைஞனைப் பொறுத்தவரை அவனுக்கு வீழ்ச்சி கிடையாது. சூழ்நிலை அவனை உயர்த்தும்; தாழ்த்தும். அது மக்களின் மனதில் தோன்றும் முடிவு” என்பது எம்ஜிஆர் அளித்த பதில்.

தத்துவப் பார்வை கொண்ட எம்ஜிஆரின் கடவுள் கொள்கை பற்றித் தெரிந்து கொள்வதற்காக, எம்ஜிஆர் அமைச்சரவையில் அறநிலையத்துறை அமைச்சராக இருந்த வி.வி.சுவாமிநாதனைச் சந்தித்தோம்.

அவர் சொன்னது:

“தி.மு.க.விலிருந்து நீக்கப்பட்ட எம்ஜிஆர், அறிஞர் அண்ணாவின் கடவுள் கொள்கையை மீண்டும் பகிரங்கமாக அமுல்படுத்த அண்ணா திமுக என்று புதிதாகக் கட்சி துவக்கியவுடனேயே, கடவுள் கொள்கையைத் தெள்ளத்தெளிவாகப் பிரகடனப்படுத்தினார். சைவர்கள் சிவன் கோயிலுக்கும் வைணவர்கள் பெருமாள் கோயிலுக்கும் கிறிஸ்தவர்கள் மாதா கோயிலுக்கும் முஸ்லிம்கள் மசூதிகளுக்கும் செல்வதுபோல் தனது கட்சியில் உள்ளவர்கள் அவரவர்கள் வழிபடும் கோயில்களுக்குப் போகலாம். தடையேதும் இல்லை. மதவழிபாடு தனிப்பட்ட நபர்களின் சுதந்திரம். அதில் நானோ எனது கட்சியோ தலையிடாது என எம்ஜிஆர் அறிக்கை வெளியிட்டார்” என்கிறார் பெரியவர் வி.வி.சுவாமிநாதன்.

# 10. 'பொன்மன'த்தில் கோயில் கொண்டிருந்தது தெய்வ நம்பிக்கை

எம்.ஜி.ஆர். அரசில் அமைச்சராக இருந்த வி.வி.சுவாமிநாதன் எம்.ஜி.ஆர். பற்றி கூறியது தொடர்கிறது.

"எம்.ஜி.ஆர். பல கோயில்களுக்குப் போயிருக்கிறார். கருமாரியம்மன் கோயிலைச் சுற்றியுள்ள வீதிகளில் இருந்த ஆக்கிரமிப்புகளை அகற்றி தேரோடும்படி நான் அவர் அமைச்சரவையில் அறநிலையத்துறை அமைச்சராக இருந்தபோது செய்தேன். அப்போது தன்னையும் அழைத்துப்போகும்படி எம்.ஜி.ஆர். சொன்னார். திருவேற்காடு கருமாரியம்மன் கோயிலுக்கு நான் எம்.ஜி.ஆரை அழைத்துச் சென்றிருக்கிறேன். ஸ்ரீரங்கம் ரங்கநாதப் பெருமாள் கோயில் ராஜகோபுரம் ஆசியாவிலேயே உயரமாகக் கட்டப்பட்டதும், தென்காசி விஸ்வநாதர் கோயிலில் பல நூற்றாண்டுகள் முன்பு இடி விழுந்த மொட்டைக் கோபுரத்தைப் புதுப்பித்ததும் திருச்செங்கோடு அர்த்தநாரீஸ்வரர் கோயிலுக்குச் செல்ல கார் போகும் தார் சாலை போட்டதும் திருச்செந்தூர் முருகனுக்கு பின்னமில்லாத முழு தங்கக் கவசம் சாத்தியதும், சிதம்பரம் நடராஜர் கோயிலுக்கு கும்பாபிஷேகம் மாத்திரமல்ல, அங்குள்ள ஆதிகடவுள் திருமூலட்டநாதருக்கு பத்தரை மாற்றுத் தங்கத்தால் கவசம் போடப்பட்டதும் திருவாரூர் தியாகேசர் கோயிலுக்குக் கும்பாபிஷேகம் செய்ததும் எம்.ஜி.ஆர் ஆட்சியில் நடந்தது. இது வரலாறு".

"சோழப் பேரரசன் ராசராசனால் கட்டப்பட்ட தஞ்சைப் பெருவுடையார் கோயிலுக்கு முதல்வர் எம்.ஜி.ஆர். பாரதப் பிரதமர் இந்திரா காந்தியுடன் வழிபாட்டுக்குச் சென்றார்.

தாயினும் சிறந்த கோயில் இல்லை என்னும் முதுமொழிக்கு இலக்கணமாக எம்.ஜி,ஆர். தான் குடியிருந்த ராமாபுரம் தோட்டத்து வீட்டுக்கு முன்பகுதியில் தன்னைப் பெற்ற தாயின் திருவுருவச்

சிலையை எழுப்பி, வீட்டிலிருந்து எங்கு சென்றாலும் தாயை வணங்கிச் செல்வார்.

எம்.ஜி.ஆர். முதல்வராக இருந்தபோது மத்திய அமைச்சர்கள் சிலர் ராமாபுரம் தோட்டத்து வீட்டுக்கு வந்தபோது வீட்டைச் சுற்றிப் பார்த்தார்கள். எங்கும் எந்தக் கடவுள் படமும் காணப்படவில்லை. ஆச்சரியமடைந்த ஒரு அமைச்சர், எம்.ஜி.ஆரைப் பார்த்து உங்களுக்குக் கடவுள் பக்தி இல்லையா? என்று கேட்டபோது, “கடவுள் என்பது பார்த்துத் தெரிந்துகொள்ளும் பொருள் அல்ல. அது உள்ளத்தால் உணர வேண்டிய ஒரு மாபேரும் சக்தி” என்று பதில் அளித்ததாக எம்.ஜி.ஆர். என்னிடம் கூறியிருக்கிறார்” என்றார் வி.வி.சுவாமிநாதன்.

எம்.ஜி.ஆரின் ஆன்மீக வாழ்க்கையில் இன்னொரு முக்கியமான கட்டம் கலவையில் நடந்தது.

தன¤மையாலும¢ தன் தவத¢தாலும¢ இந்த மண்ணுக்குப் பெருமை சேர்த்தவர் காஞ்சி மஹாஸ்வாமிகள். அவரை உள்ளத்தில் வைத்துப் போற்றியவர் எம்.ஜி.ஆர். கலவைக்குச் சென்று மகா ஸ்வாமிகளைத் தரிசித்தது 1969ல். அந்த சரித்திர நிகழ்ச்சியைத் தெரிந்து கொள்வதற்காக தேனம்பாக்கத்துக்குச் சென்றோம். மகா ஸ்வாமிகளின் அணுக்கத் தொண்டர்கள் சந்திரா, சந்திரமௌலி ஆகியோரைச் சந்தித்தோம்.

சந்திரமௌலி கூறியது:

கே: எம்.ஜி.ஆரும் பெரியவாளும் சந்தித்தது எப்போது?

சந்திரமௌலி: 1969 கலவையில், ஆற்றங்கரையில் பெரியவாளோட பரமகுரு பிருந்தாவனம் இருக்கிறது. அங்கு ஒரு ஆறு மாசம் தங்கியிருந்தா பெரியவா. கலவைலேந்து கிழக்கா ரெண்டு கிலோமீட்டர் தூரத்துல கைலாசநாதர் கோயில்னு ஒரு சிவன் கோயில் இருக்கு. அதுக்குப்பக்கத்துல ‘கமண்டலூ’ நதின்னு ஒரு நதி ஓடிய

இடம். இப்பவும் அந்த நதி இருக்கு. மழை நாளில் ஜலம் இருக்கும். அப்போ நதியில லேசா ஜலம் இருந்தது.

கே: கலவையிலிருந்து காஞ்சீபுரத்துக்கு எவ்வளவு தூரம்?

சந்திரமௌலி—: ரோடு வழியா வந்தா 40 கிலோமீட்டர், குறுக்கு வழியா வந்தா 34 கிலோமீட்டர். வயல் வாய்க்கால் வழியா வந்தா 6 கிலோமீட்டர் குறைவு. அன்னிக்கு காலம்பற 2.30 மணிக்கு எழுந்து காஞ்சீபுரம் போகணும்ன்னு பெரியவர் சொன்னார். நேரே கைலாசநாதர் கோயில் வாசல்ல வந்து பக்கத்துலய இந்த நதி இருக்கு. அங்கே பள்ளம். அங்கே வந்ததும் ஸ்நானம் பண்ணினா தேவலையேன்னா.

அப்போ விவசாயிகளெல்லாம் மம்முட்டியால வயலை வெட்டிண்டிருந்தா. அவாள்டேந்து ஒரு மம்முட்டியை வாங்கிண்டு வந்து நாங்க பள்ளம் பண்ண ஆரம்பித்தோம். ஒரு மொழம் ஆழத்துக்கு ஜலம் இருந்தாதான் ஸ்நானம் பண்ண முடியும். அதுக்குள்ள காலம்பற 5.30 ஆயிடுத்து. இன்னும் கொஞ்சம் தோண்டுன்னு சொல்லிண்டிருந்தா.

அந்த நேரத்துல ஒரு கார் வந்தது. காரை மெயின் ரோடுலேயே நிறுத்திட்டு இதயம் பேசுகிறது மணியன் வந்தார். பெரியவா அவரைப் பார்த்துட்டு “நீ எங்க வந்தே” ன்னு கேட்டார். அவர் “எம்.ஜி.ராமச்சந்திரன் வந்திருக்கார். பெரியவாளைப் பாக்கணும்னு” சொன்னார். சிரிச்சுண்டே “அழைச்சுண்டு வான்னா பெரியவா”. எம்.ஜி.ராமச்சந்திரன் வந்தார். உக்காந்துண்டிருந்தார். “உன்னோட சரீர ஆரோக்கியம் எப்படி இருக்குன்னு” கேட்டா பெரியவா. “பெரியவங்களோட ஆசீர்வாதத்துனால நான் சௌக்கியமா, நன்னா இருக்கேன்”னு சொன்னார் அவர். பூ மாலை கொடுத்து அதை போட்டுக்கணும்னு சொன்னார் எம்.ஜி.ஆர். அதைப் பெரியவா வாங்கி மடியிலே வெச்சுண்டார் என்றார் சந்திரமௌலி.

# 11. “நல்ல பேரை வாங்க வேண்டும்”

காஞ்சி மஹாஸ்வாமிகளை எம்.ஜி.ஆர். தரிசித்தது பற்றி சந்திரமௌலி தொடர்ந்து கூறியது:

இரண்டு நிமிஷம் எம்.ஜி.ஆர். பெரியவாளையே பாத்துண்டிருந்தா. கூட மணியன் இருந்தார். அப்போ மணியன் தவிர நாங்க மூணு பேர் கூட இருந்தோம். எம்.ஜி.ஆர். பெரியவா ஆரோக்கியமா இருக்காளான்னு கேட்டார். “இருக்கேன், பரமேஸ்வரன் பாத்துக்கறார் என்னை”ன்னு சொன்னா பெரியவா. சொல்லிட்டு சிரிச்சுண்டார்.

“இதே மாதிரி நிறைய ஜனங்களுக்குப் பாடுபடணும். மக்களுக்காகப் பாடுபடணும். மக்களுக்காக நல்லது செஞ்சுண்டே நல்லவங்கற பேர் வாங்கணும். நல்லவங்கற பேரோட போய்ச் சேரணும்” அப்படின்னு எம்.ஜி.ஆர். கேட்டார்.

பெரியவா சிரிச்சுண்டே, “உன் எண்ணப்படியே நடக்கும்” அப்படின்னா, ரெண்டு நிமிஷம் உக்காரலாமான்னு கேட்டார். உக்காருன்னா பெரியவா. உட்கார்ந்து இவாளைப் பார்த்து தியானம் பண்ணினா. அப்புறம் போய்ட்டுவான்னுட்டா. ஆறு மணியாயிடுத்து. அவா கிளம்பிப்போனா. எம்.ஜி.ஆர். வந்துட்டார்ன்னு தெரிஞ்சதும் அங்க கிராமத்து ஜனங்க எல்லாம் கூடிட்டா. இதெல்லாம் பெரியவா பாத்துண்டே இருந்தா.

“ஸ்நானம் முடிந்ததும் காஞ்சிபுரம் போகவில்லை. கலவைக்கே போய்விட்டோம்”.

“அதுக்கு அப்புறமா தேரதல¢ வந்து எம்.ஜி.ஆர். ஜெயிச்சார்...

பல வருஷங்களுக்குப் பிறகு முதலமைச்சர எம்.ஜி.அரக்கு உடம்புக்கு சரியில்லாம போயிடுத்து. அமெரிக்காவுக்குப் போய் டிரீட்மெண்ட் எல்லாம் பண்ணிண்டு வந்தார். வந்து காஞ்சிபுரத்துக்கு ஒரு தடவை வந்தார். வரும்போது மூணு பெரியவாளும் அங்கே இருந்தா. மடத்துக்கே வந்து நமஸ்காரம் பண்ணிட்டு ஒரு அஞ்சு

நிமிஷம்தான் இருந்தார். அவராலே அதுக்குமேலே இருக்கமுடியல்லே. பேசவே இல்லை. அவரால் பேச முடியல. பெரியவா கையை மட்டும் காட்டினா. அவர் நமஸ்காரம் பண்ணினார்". என்றார் சந்திரமௌலி.

எம்.ஜி.ஆர். கலவைக்குச் சென்று காஞ்சி மஹாஸ்வாமிகளை தரிசித்த செய்திகளைப் பார்த்தோம்.

இந்த அளவில் இதை நிறுத்திவிட்டு, அரசியல் நிகழ்வுகளுக்குப் போகலாம். 'திமுகவின் ஊழல் அதிகரித்துவிட்டது' என்று (08.10.1972) பொதுக்கூட்டத்தில் பேசினார் எம்.ஜி.ஆர். அது திமுகவினருக்கு அதிர்ச்சியாக இருந்தது என்பதை ஏற்கனவே பார்த்தோம். அன்றைய தமிழக அரசியலைப் புரிந்து கொள்வதற்காக ஒரு பிரபல வழக்கறிஞர் எழுதிய கட்டுரையின் பகுதியைக் கொடுத்துள்ளேன். அன்று அவர் வெறும் அரசியல் விமர்சகராகத்தான் இருந்தார். பின்னாளில்தான் அரசியலில் ஈடுபட்டு காங்கிரஸ் கட்சியின் பிரபலமானார். அவர் ப.சிதம்பரம்.

கணையாழி இதழில் செப்டம்பர் 1972இல் ப.சிதம்பரம் எழுதியது:

"செப்டம்பர் 17ஆம் தேதி அண்ணாதுரையின் பிறந்தநாளையொட்டி நடந்த ஊர்வலத்தில் கருணாநிதியின் மகன் மு.க.முத்து தலைமை தாங்கினார். கழகப் பொருளாளர் எம்.ஜி.ஆர். ஊர்வலத்துக்கும் வரவில்லை. பொதுக்கூட்டத்துக்கும் வரவில்லை. முன்னரே நிச்சயித்த 'கோலார் தங்க வயல்' கூட்டத்திற்குப் போய்விட்டார். வெடிக்கப்போகிறது, வெடிக்கப்போகிறது என்று எதிர்பார்த்த சண்டை வெடித்தே விட்டது. எம்.ஜி.ராமச்சந்திரன், மனோகரன், தில்லை வில்லாளன், சீனிவாசன், மதியழகன், அன்பழகன் (?) இவர்களெல்லாம் கருணாநிதிக்கு எதிர்ப்பு அணி என்று கருத இடம் இருக்கிறது. ஆனால், திமுகழகத்தினர் எளிதாகவோ, விரைவாகவோ, தங்கள் கட்சியைப் பிளக்க மாட்டார்கள். கழகம் தான் அவர்களுக்குத் தாரம், ஆகாரம், ஆதாரம் எல்லாம். ஆளும் கட்சியாக இருக்கும்போதே திமுகழகம் உடைந்துவிடும் என்று நினைப்பதற்கு இன்னும் வலுவான காரணங்களும், ஆதாரங்களும்

வேண்டும். செப்டம்பர் மாதத்து வாண வேடிக்கைகள் போதா" என்று திமுகவைப் பற்றி சில ஆரூடங்கள் சொல்லியிருந்தார் ப.சிதம்பரம்.

திமுக உடையாது என்று ப.சிதம்பரம் எழுதியதுபடி நடக்கவில்லை. திமுக உடைந்தே விட்டது. உடைந்த பிறகு ப.சிதம்பரம், வெளியேற்றப்பட்டவர்களுக்காக மீண்டும் ஒரு கட்டுரை எழுதினார். கணையாழி இதழில் நவம்பர் 1972இல் ப.சிதம்பரம் எழுதியது:

முதலமைச்சர் மு.கருணாநிதி மீது கூறப்பட்ட குற்றச்சாட்டுகளையும் அது குறித்துச் சட்டமன்றத்தில் கருணாநிதி அளித்த விளக்கங்களையும் ஆராய்ந்து எழுதப்பட்டிருந்தது ப.சிதம்பரத்தின் கட்டுரை. கருணாநிதியின் தகிடுதத்தங்களை தர்க்க ரீதியாக எதிர்கொண்டது அந்தக் கட்டுரை.

"முதலமைச்சர் மு.கருணாநிதியைப் பொறுத்த குற்றச்சாட்டுகளில் மையக் களமாகக் கோபாலபுரம் விளங்குவதைப் பார்க்கிறோம். கோபாலபுரத்திற்கு அப்பால், ராஜா அண்ணாமலைபுரத்தில், முதல் குறுக்குத் தெருவில் ஒன்பதாம் இலக்கம் கொண்ட வீடு, நிலத்தின் பரப்பு,4385 சதுரஅடி. 1971ம் ஆண்டுவரையில் யாருக்குச் சொந்தம் என்று சொல்லப்படவில்லை. 30.01.1972 அன்று திருமதி சிவபாக்யத்தம்மாள் என்பவர் தன்னுடைய சொந்தப் பணத்திலிருந்து நிலத்தையும் வீட்டையும் வாங்கினார். எவ்வளவு விலைக்கு என்பதைச¢ சொல்லவில்லை. இன்றைக்கு, வீட்டிலே கிணறு, பம்புசெட்டுகள், சுற்றுச்சுவர் எல்லாம் இருக்கின்றன. வீடும் நல்ல வீடுதான் என்று சென்னைவாசிகள் சொல்கிறார்கள்"—என்று எழுதினார் ப.சிதம்பரம்.

# 12. இடைநீக்கம் செய்து இம்சை

தன்னுடைய சொத்து பற்றிய விவரங்களைக் கொடுக்கும்போது முதலமைச்சர் மு.கருணாநிதி செய்த தகிடுதத்தங்களை ப.சிதம்பரம் வெட்டவெளிச்சமாக்கினார். அன்றைய காலகட்டத்தில், பெரும்பான்மையான தமிழர்களின் உணர்வைப் பிரதிபலிப்பதாக அந்தக் கட்டுரை இருந்தது.

“திருமதி சிவபாக்கியத்தம்மாளுக்கு மூன்று குழந்தைகள். மூத்த மகள் ராஜலட்சுமி. நிறைய பணச் செலவில் இவருக்கு விமரிசையாகத் திருமணம் செய்யப்பட்டது. மகன் சுப்பிரமணியம். இவருடைய படிப்புக்குக் கணிசமான தொகை செலவிடப்பட்டது. எஞ்சிய பணத்திலிருந்து திருமதி சிவபாக்கியத்தமாள் 30—.01.1972 அன்று வீட்டை வாங்கியிருக்கிறார். ஒன்றரை மாதங்களில் இந்த வீட்டைத் தன்னுடைய இளைய மகள் திருமதி தர்மசம்வர்த்தினி அல்லது ராசாத்தி என்பவருக்கும் திருமதி தர்மாவின் மகள் கனிமொழிக்கும் பரிசாகத் தரவேண்டும் என்று தோன்றியிருக்கிறது. 20.03.1972 அன்று செட்டில்மென்ட் பத்திரம் எழுதிவைத்துள்ளார். பத்திரத்தில் வீட்டின் மதிப்பு ரூ.45,000 என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது”.

“செல்வி கனிமொழியை (இன்று ஐந்து வயது) தன்னுடைய மகள் என்று திரு.மு.கருணாநிதி இன்று கூறுகிறார். அப்படியிருந்தும் தன்னுடைய மைனர் மகளுக்கு உரிமையுள்ள வீட்டைத் தன்னுடைய கணக்கில் காட்ட வேண்டியதில்லை என்பதற்கு அவர் சொல்லும் காரணம் வியப்பளிக்கிறது”.

திரு.கருணாநிதி சொல்கிறார்:

“திருமதி சிவபாக்கியத்தம்மாளின் மறைவுக்குப் பிறகு திருமதி தர்மசம்வர்த்தினி அல்லது ராசாத்தியும் என்னுடைய மகள் கனிமொழியும் இவ்வீட்டை அடைவர். இச்சூழ்நிலையில், என்னுடைய சொத்துக் கணக்கிலும் வருமான வரிக் கணக்கிலும் இந்த வீட்டைச்

சேர்ப்பதற்கு எனக்கு உரிமையில்லை” என்கிறார். இந்தக் காரணம் பொருத்தமானது என்று தோன்றவில்லை.

செட்டில்மென்ட் பத்திரத்தை திருமதி சிவபாக்கியத்தம்மாள் மாற்றவோ முறிக்கவோ முடியாது என்று பத்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. திருமதி சிவபாக்கியத்தம்மாள் வீட்டை விற்கவும் முடியாது. அப்படியிருக்கும் போது செல்வி கனிமொழிக்குப் பாதி உரிமை தோன்றிவிட்டது என்று கொள்ளலாம். மகள் கனிமொழிக்குக் கிடைத்திருக்கும் பாதி உரிமையையும் கனிமொழியின் தாயார் திருமதி தர்மசம்வர்த்தினிக்கும் கிடைத்திருக்கும் மறுபாதி உரிமையையும் திரு.கருணாநிதி குறிப்பிடுவதுதான் சிறப்பு. அதுமட்டுமல்ல. திருமதி சிவபாக்கியத்தம்மாள் தன் மூத்த மகளுக்கு விமர்சையாகத் திருமணம் செய்வதற்கும் தன் மகளைப் படிக்க வைப்பதற்கும், 1972ல் வீடு வாங்குவதற்கும் (என்ன விலைக்கு) செலவழித்த பணங்களைப் பற்றிய வருமானவரிக் கணக்குகளையும் வருமான வரிக்கு உட்பட்டிருந்ததால் அந்த விவரங்களையும் திரு.கருணாநிதி சேகரித்துத் தந்திருந்தால், அவருடைய நிலை இன்னும் தெளிவடைந்திருக்கும்” என்று எழுதினார் ப.சிதம்பரம்.

தி.மு.க.வினரின் ஊழல் குறித்த தமிழக மக்களின் கசப்புணர்வைப் புரிந்துகொண்ட எம்.ஜி.ஆர். பொதுக்கூட்டத்தில் பக¤ரங¢கமாகப¢ பேசினார். அதன் விளைவுதான் எம்.ஜி.ஆருக்கு எதிராக தி.மு.க. தலைமை நடவடிக்கை எடுத்தது. சென்னையில் கூடிய செயற்குழுவில் மனு ஒன்று கொடுக்கப்பட்டது. மனுவின் சாராம்சம் இதுதான்.

அண்மையில் சில நாட்களாகக் கழகப் பொருளாளர் திரு.எம்ஜிஆர் அவர்கள் கழக சட்டதிட்டத்துக்கு மாறாகவும் கழக அரசையும், சட்டமன்ற, நாடாளுமன்ற உறுப்பினர்களையும், மாவட்ட, வட்ட, கிளைக்கழகச் செயலாளர்களையும் குற்றம்சாட்டும் முறையில் கழகத்தையே இழிவுபடுத்திப் பேசி வருவதாலும், கழகச் செயற்குழுவிலும் பொதுக்குழுவிலும் மட்டுமே பேசக்கூடியதும்,

மறுக்கப்படக் கூடியதுமான பிரச்சினைகளைப் பொதுமேடையில் பேசி பொதுமக்களிடம் குழப்பம் ஏற்படுத்தி வருகிறார்.

மேலும் கோவையில் நடைபெற்ற பொதுக்குழுவில், மதுவிலக்கு ஒத்திவைப்பு தீர்மானத்தை ஆதரித்துப் பேசி, அந்தத் தீர்மானத்தை ஒருமனதாக நிறைவேற்றுவதற்கு ஒத்துழைத்திருந்து இப்போது அதனை எதிர்த்துப் பேசி வருகிறார்.

மேலும், கழகப் பொதுக்குழுவிலும் செயற்குழுவிலும் அவர் ஒரு தீர்மானத்தைக் கொண்டு வரப்போவதாகவும் அந்த தீர்மானத்தைப் பொதுக்குழு ஒத்துக்கொள்ளாவிட்டால் அவர் பொதுமக்கள் முன்னால் சென்று பிரச்சினையை எடுத்துவைத்துக் கழகத்தைச் சந்திப்பேன் என்று பேசி இருக்கிறார். அவருடைய இந்தப்போக்கு கழக அமைப்பையும், பொதுக்குழுவையும், நமது ஜனநாயக முறையையும் இழிவுபடுத்துவதாக உள்ளது. ஆகவே, கழகக் கட்டுப்பாட்டைக் காப்பாற்றவும் விதிமுறைக்கு மதிப்பளிக்கும் வகையிலும் அவர் மீது உடனடியாகத் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும்.

இந்த மனுவை அடுத்து எம்.ஜி.ஆருக்கு நோட்டீஸ் அனுப்பப்பட்டது. அந்த நோட்டீஸில் எம்.ஜி.ஆரை எல்லாப் பொறுப்புகளிலிருந்தும் சஸ்பென்ட் செய்திருப்பதாகச் சொல்லப்பட்டிருந்தது.

விளக்கம் கேட்கும் நோட்டீஸிலேயே வாய்ப்புத் தரப்படாமல், எம்.ஜி.ஆர். சஸ்பென்ட் செய்யப்பட்டார் என்பது முக்கியமான விஷயம்.

இதற்கு எம்.ஜி.ஆர் கொடுத்த பதிலடி என்ன என்பதையும் இந்த நேரத்தில் ஈ.வெ.ராவின் புத்தி எப்படி வேலை செய்தது என்பதையும் பார்க்கலாம்.

# 13. சொத்துபற்றி கேட்டால் சும்மா இருப்பார்களா?

தி.மு.க.வின் ஊழலைப் பற்றி பகிரங்கமாகப் பேசினார் எம்.ஜி.ஆர். என்பதையும் அதற்காகக் கட்சியிலிருந்து நோட்டீஸ் அனுப்பப்பட்டது என்பதையும் பார்த்தோம்.

அந்தக் காலகட்டத்தில், தமிழ்நாட்டின் கருத்துருவாக்கமே எம்.ஜி.ஆருக்கு ஆதரவாகவும், எதிராகவும் பிளவுபட்டிருந்தது. எம்.ஜி.ஆரின் ஆதரவாளர்கள் அந்த அக்டோபர் மாதத்தை அக்டோபர் புரட்சி என்று கொண்டாடினார்கள். கருணாநிதி கட்சியில் இருந்தவர்களுக்கோ அது கருப்பு அக்டோபர் ஆக காட்சியளித்தது.

நாடே கொந்தளித்திருக்கும் போது ஊடகங்கள் சும்மா இருக்குமா? அவை தன் பங்கிற்கு அக்னியை அள்ளிப் போட்டன. எம்.ஜி.ஆர். விவகாரம் குறித்து முன்னணி வார இதழ் ‘குமுதம்’ (19.10.1972) எழுதிய தலையங்கத்தைப் பார்க்கலாம்.

“கம்யூனிஸ்டுக் கட்சியில் இரண்டும் காங்கிரஸ் கட்சியில் இரண்டும் இருக்கும் போது தி.மு.கவில் இரண்டு இருக்கக் கூடாதா?” என்று யாரோ கேட்டதாக ‘மெயில்’ ஏடு குறிப்பிட்டிருப்பது படிக்க வேடிக்கையாக இருக்கலாம்.

ஆனால், உண்மையில் கட்சிகள் பிளவுபடுவது அரசியலுக்கு அவ்வளவு நல்லதல்ல. அதனால் எவ்வளவு மனக்கொதிப்பு, சக்தி விரயம், வீண் குழப்பம்!

எம்.ஜி.ஆருக்கும் மற்ற கழகத் தலைவர்களுக்குமிடையில் ஏற்பட்டிருக்கும் பிணக்கு விரைவில் தீர்ந்துவிடக் கூடும் என்றும் அவர் பழையபடி கழகத்தின் முக்கிய தலைவர்களுள் ஒருவராக ஏற்றுக் கொள்ளப்படுவார் என்றும் எதிர்பார்ப்போம்.

ஆனால், ஒன்று தெளிவு.

பிளவு இருந்தாலும் சரி, விரிநதாலும் சரி; திருக்கழுக்குன்றம், செங்கல்பட்டு ஆகிய ஊர்களில் திரு.ராமச்சந்திரன் ஆற்றிய காரசாரமான சொற்பொழிவுகளும் அவற்றைத் தொடர்ந்து கழக செயற்குழு மேற்கொண்ட கடுமையான நடவடிக்கையும் தமிழக அரசியலில் ஒரு எதிர்பாராத திருப்பமாக அமைந்துவிட்டது என்பதில் சந்தேகம் இல்லை.

சினிமாவில் எப்படியோ, அரசியலில் சந்தேகத்திற்கு இடமில்லாமல் புரட்சி செய்துவிட்டார் எம்.ஜி.ஆர்.

கழகத்தில் எவருக்கும் கலைஞரை எதிர்க்கும் திடமில்லை என்றும், யாருக்கு எதை எப்போது கொடுப்பது எவ்வாறு வளைத்துக்கொள்வது என்ற அரசியல் தந்திரத்தை திரு.கருணாநிதியைக் காட்டிலும் அதிக வெற்றியோடு பயில்பவர் ஒருவரும் கிடையாது என்றும் பரவலான கருத்து இருந்து வந்ததால், என்னதான் பூசல் இருந்தாலும் எம்.ஜி.ஆர். போன்ற ஒரு முக்கியமான தலைவர் அவர் ஊட்டி வளர்த்த கட்சியிலிருந்து திடுமென தள்ளப்படும் விபரீதம் வரக்கூடும் என்று யாரும் கனவிலும் நினைத்திருக்க முடியாது.

# 14. கணக்குக் கேட்டால் யாருக்குமே பிடிக்காது

கணக்குக் கேட்டால் யாருக்குமே பிடிக்காது. அதுவும் கழகத் தலைவர்களுக்குப் பிடிக்கவே பிடிக்காது.

அது தெரிந்திருந்தும் திரு.எம்.ஜி.ராமச்சந்திரன் கணக்குக் கேட்டார்.

கழக மாவட்டச் செயலாளர்கள், வட்டச் செயலாளர்கள், கிளைக் கழகச் செயலாளர்கள் ஆகியோருக்குச் சொத்து வந்திருக்குமானால், அது எப்படி வந்தது என்று காட்ட வேண்டும் என்று சொன்னதோடு நிறுத்தியிருந்தாலும் பரவாயில்லை.

அவர்களுடைய உறவினர்களும் கணக்கு காட்ட வேண்டும் என்று கேட்டுவிட்டாரே!

இதை எப்படிப் பொறுத்துக் கொள்ள முடியும்? நடவடிக்கை எடுத்துவிட்டார்கள்.

கழகத் தலைவர் ஒருவர் பகிரங்கமாகப் பொதுமேடையில் அப்படிப் பேசுவது கட்சிக் கட்டுப்பாட்டுக்கு முரணான ஒரு செய்கையாக இருக்கலாம். அவரைக் கட்சியிலிருந்து வெளியேற்றுவது கட்சியின் உரிமையாகவும் இருக்கலாம்.

ஆனால், உரிமையைப் பயன்படுத்துவதைக் காட்டிலும் —“உங்களுக்கு என்ன வேண்டும், கழக மாவட்டச் செயலாளர்கள், வட்டச் செயலாளர்கள், கிளைக் கழகச் செயலாளர்கள் ஆகியோர் பேரில் என்ன சொத்து இருக்கிறது என்றும், அவர்கள் உறவினர்கள் பேரில் என்ன சொத்து இருக்கிறது என்றும் எனக்குத் தர வேண்டும். அந்த சொத்து எப்படி வந்தது என்று விளக்கம் சொல்ல வேண்டும். அவ்வளவுதானே? அதற்கு நான் ஏற்பாடு செய்கிறேன்” என்று எம்.ஜி.ஆருக்கு கலைஞர் உறுதியளித்திருந்தால் அது எவ்வளவோ பெருமையாக இருந்திருக்கும்.

“துரதிர்ஷ்டவசமாக அப்படி உறுதியளிக்கும் நிலையில் அவர் இல்லை போலும்” என்று எழுதியது, லட்சக்கணக்கான வாசகர்கள் கொண்ட குமுதம் வார இதழ்.

பெரும்பான்மையான தமிழ் மக்களின் பார்வையில் கருணாநிதி சந்தேகத்திற்குரியவராகத் தென்பட்டார் என்பதற்கு குமுதத்தின் தலையங்கம் ஒரு எடுத்துக்காட்டு.

செயற்குழுவைத் தொடர்ந்து, தி.மு.க.வின் பொதுக்குழு கூடியது (14.10.1972). பொதுக்குழுவில் எம்.ஜி.ஆருக்கு எதிரான தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

பொதுக்குழு கூடிய அதே நாளில்தான், தான் தி.மு.கவிலிருந்து விலகிவிட்டதாக எம்.ஜி.ஆர். அறிவித்தார். அந்தச் செய்தியை அறிவித்துவிட்டு, அங்கு தன்னோடு இருந்தவர்களுக்கு பாயசம் கொடுத்துக் கொண்டாடினார் என்கிற செய்தியும் வெளிவந்தது.

அப¢போது கருணாநிதி எதிர்பார்க்காத ஒரு விளைவு தமிழகத்தில் ஏற்பட்டது. அங்கங்கே தி.மு.க. கொடிகள் வெட்டிச் சாய்க்கப்பட்டன. அரசு பஸ்களை ஓட்ட முடியவில்லை. தமிழகமெங்கும் சாலைகளில் செல்லும் வண்டிகள் அனைத்தும் எம்.ஜி.ஆருக்கு ஆதரவாகவும், கருணாநிதிக்கு எதிராகவும் போஸ்டர் ஒட்டினால்தான் நகர முடியும் என்கிற கொந்தளிப்பான சூழ்நிலை ஏற்பட்டது.

# 15. சுவரை இடித்து மேடைக்கு வழி

“பதினைந்து லட்சம் உறுப்பினர்களையும் 18 ஆயிரம் கிளைகளையும் கொண்ட கழகம் இது. என்னுடைய 28 ஆண்டுகால நண்பரான அவரையோ அல்லது என்னையோ காப்பதை விடக் கழகத்தை காப்பதே முக்கியம். கழகத்தில் ஊழல் என்று பொது இடத்தில் பேசியதற்காக அவரை விலக்கி வைக்கும் நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது” என்றார் கருணாநிதி.

எம்.ஜி.ஆரை நீக்குவதற்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்ததே இவர்தான். தனக்கு சம்பந்தமில்லாதது போலப் பேசி சாமர்த்தியமாக நடந்துகொள்ளும் முயற்சிதான் இது. புலிக்குப் போட்டியாகப் பூனையை வளர்த்ததுபோல் எம்.ஜி.ஆருக்கு மாற்றாக மு.க.முத்துவை வளர்த்தது இவர்தான். ஆனால், கருணாநிதி தன்னுடைய முழுத் திறமையைக் காட்டினாலும், அயோக்கியத்தனமாக அரசு அதிகாரத்தைப் பயன்படுத்தினாலும் மக்கள் அவரை நம்பத் தயாராக இல்லை.

ஈ.வெ.ரா. போன்ற ஒரு சிலரே அவருக்கு ஆதரவாக இருந்தார்கள். (11.10.1972) அன்று மைலாப்பூர் பொதுக்கூட்டத்தில் பேசிய ஈ.வெ.ரா, எம்.ஜி.ஆரைக் கண்டித்தார்.

“தி.மு.கழகத்தின் பொருளாளர் இவர்தான். கணக்குத் தெரிய வேண்டுமென்றால், ரகசியமாக உறவுமுறையில் கேட்டிருக்கலாமே! பொதுமேடையில் பேசியதால் கழகத்துக்குத்தான் கேடு செய்தார்கள். இதற்கு நடவடிக்கை எடுக்காமல் விட்டால், கழகத்தின் கதி என்ன? எதிர்காலம் இருக்குமா? வெளியில் போவதற்கு சாக்கு தேடியதுபோல் இப்போது குப்பை போடுகிறார்கள். ஆகையால், தமிழ்மக்கள் ஜாக்கிரதையாக கவனிக்க வேண்டும்” என்றார் ஈ.வெ.ரா.

பிறகு எம்.ஜி.ஆரை அழைத¢து விவகாரத்தில் சமாதானம் பேசினார் ஈ.வெ.ரா. ஆனால், ஈ.வெ.ரா.வின் பிடியில் எம்.ஜி.ஆர். சிக்கவில்லை.

தன்னுடைய பேச்சைக் கேட்கவில்லை என்றவுடன் ஈ.வெ.ரா, எம்.ஜி.ஆரை வசைபாட ஆரம்பித்தார். எம்.ஜி.ஆர். தி.மு.க.வில் பொருளாளராக அறிவிக்கப்பட்ட போதே, 'கலைஞர் எதிலோ காலை வைத்துவிட்டாரே' என்று சொல்லி எம்.ஜி.ஆரை 'மலம்' என்று பழித்தவர்தான் ஈ.வெ.ரா. அதே வன்மம் தான் தொடர்ந்தது. இதைப் பற்றியெல்லாம் கவலைப்படாத எம்.ஜி.ஆர். புதுக்கட்சி தொடங்கிவிட்டார் (17.10.1972). கட்சியின் பெயர் அண்ணா திராவிட முன்னேற்ற கழகம்.

எம்.ஜி.ஆரின் அரசியல் முயற்சிக்குத் தமிழக மக்களிடம் கிடைத்த வரவேற்பு பற்றி அவருடைய பாதுகாவலர் கே.பி.ராமகிருஷ்ணன் 'மனிதப் புனிதர் எம்.ஜி.ஆர்.' என எழுதிய புத்தகத்தில், 'எம்.ஜி.ஆரை தி.மு.கவிலிருந்து நீக்கிய பின்பு தமிழ்நாடே கொந்தளித்துக் கொண்டிருந்தது. மக்கள் கொதிப்படைந்த சமயம் அது. அந்த நேரத்தில் மக்களைச் சந்தித்து நியாயத்தை எடுத்துக் கூறவும் மக்களின் மனநிலையையும் கருத்தையும் அறியவும் ஒரு சுற்றுப்பயணத்தை மேற்கொண்டார் எம்.ஜி.ஆர். அவருடன் நாங்களும் மிகுந்த கவனத்துடன் எங்களது பணியில் ஈடுபட்டிருந்தோம். அனகாபுத்தூர் ராமலிங்கம், ஆலந்தூர் மோகனரங்கன், செங்கல்பட்டு எஸ்.எம்.துரைராஜ், எம்.கே.காதர், கே.ஏ.கிருஷ்ணசாமி போன்ற ஆதரவாளர்கள் எம்.ஜி.ஆருடன் புறப்பட்டோம்.

முதலில் ஆலந்தூரில் புறப்பட்ட சுற்றுப்பயணம் தொடர்ந்து பல்லாவரம், தாம்பரம், காஞ்சிபுரம், ஆரணி, அரக்கோணம் என்று ஏராளமான இடங்களுக்குத் தொடர்ந்தது. சென்ற இடங்களிலெல்லாம் மக்கள் உணர்ச்சிவசப்பட்டு கொந்தளிப்புடன் காணப்பட்டனர். சொல்லப்போனால், இரவில் கூட சிறிதும் தூக்கமின்றி விடிய விடிய மக்களைச் சந்தித்தார். மக்களின் பாச வலையில் நெகிழ்ந்து போனார் எம்.ஜி.ஆர். எங்கு நோக்கினும் வாழ்த்துக் கோஷம் விண்ணைப் பிளந்தது. ஒவ்வொரு பகுதியிலும் லட்சக்கணக்கான மக்கள் மத்தியில், வேன் மெல்ல ஊர்ந்து செல்லும் நிலைமையே ஏற்பட்டது. அவ்வாறு காஞ்சிபுரத்தில் மிக பிரம்மாண்டமான ஏற்பாடுகள்

செய்யப்பட்டிருந்தபோது கூட்டத்தில் பேச இரவு 7 மணிக்குச் செல்வதாக அறிவிக்கப்பட்டு இருந்தது என்ற போதிலும், மக்களின் அன்பு மழையில் நனைந்த எம்.ஜி.ஆர். நள்ளிரவு 1 மணிக்குத்தான் செல்ல முடிந்தது.

மேடையின் சுமார் 1.5 கி.மீ. முன்பாக தங்களது தூக்கத்தை மறந்து, குடும்பத்தினருடன் எம்.ஜி.ஆரைக் காணத¢ திரண்டிருந்த கூட்டத்தைக் கண்டு எம்.ஜி.ஆர். உள்பட அனைவரும் அசந்து போனோம். வேனிலிருந்து எம்.ஜி.ஆரை இறக்கி மக்கள் கூட்டத்தின் வழியாக அழைத்துச் செல்வது என்பது நிச்சயம் நடவாத செயல் என்பதால், எம்.ஜி.ஆரிடம் வெளியிலிருந்தே பேசிவிட்டுச் செல்லலாம் என்று ஆதரவாளர்கள் கூறியதை எம்.ஜி.ஆர். ஏற்றுக்கொள்ளவில்லை. திட்டமிட்டபடி மேடையில் சென்றுதான் பேச வேண்டும். தன்னைக் காண ஆவலுடன் இருக்கும் மக்கள் ஏமாற்றம் அடையக் கூடாது என்பதில் உறுதியுடன் இருந்தார் எம்.ஜி.ஆர். உடனே நாங்கள் கூட்ட ஏற்பாடுகளைச் செய்திருந்த காஞ்சி பாலாஜி உட்பட மற்றவர்களுடன் ஆலோசித்து மேடைக்குச் செல¢ல வேறு வழி ஏதேனும் உள்ளதா என்று கேட்டதற்கு வேறு எந்த வழியுமில்லை. மக்கள் அமர்ந்திருக்கும் கூட்டம் வழியாகத் தான் செல்ல வேண்டும் என்றும் மேடைக்குப் பின்னால் மிகப் பெரிய சுவர் உள்ளதால், அவ்வழியேயும் செல்ல இயலாது என்றும் கூறிவிட்டனர். உடனே நாங்களும் கூட்டத்தின் வழியாக மேடைக்குச் செல்லத் தயாரானோம். எம்.ஜி.ஆரும் தயாராகிவிட்டார்.

ஆலந்தூர் மோகனரங்கம், கூட்டத்தை ஏற்பாடு செய்த தோழர்களுடன் பேசி, இரண்டு நபர் உள்ளே செல்லும் வகையில் மேடைக்குப் பின்புறம் இருந்த சுவரை இடிக்கச் செய்தார். மின்னல் வேகத்தில் பணிகள் நடைபெற்று வேனை வேறு வழியில் திருப்பி மேடை அருகே கொண்டு சென்றோம். பின், இடிக்கப்பட்ட சுவர் வழியாக மேடைக்குச் சென்று பலத்த கரகோஷங்களிடையே மக்களிடம் பேசினார்” என்று எழுதுகிறார் கே.பி.ராமகிருஷ்ணன்.

# 16. எம்.ஜி.ஆரை வசை பாடினார் ஈ.வெ.ரா.

எம்.ஜி.ஆரைத் தி.மு.க.வை விட்டு நீக்கிய பிறகு, தமிழ்நாடெங்கும் கொந்தளிப்பு ஏற்பட்டது. பொதுமக்களின் எதிர்ப்பைச் சமாளிக்க முடியாமல், கருணாநிதி அடக்குமுறையைக் கட்டவிழ்த்து விட்டார். ஒரு கட்டத்தில், அதற்குப் பலனில்லாமல் போனது. எனவே, அவர் தன்னுடைய மேலிடமான ஈ.வெ.ரா.வை நாடினார். ஈ.வெ.ரா, எம்.ஜி.ஆரை அழைத்துப் பேசினார். அதற்கும் பலனில்லை.

எம்.ஜி.ஆர். தன்னுடைய செயல்படி நடக்கமாட்டார் என்பது தெரிந்தவுடன், ஈ.வெ.ரா. வசை பாட ஆரம்பித்தார். விடுதலை நாளிதழில் 23.10.1972அன்று வெளியிட்ட கட்டுரையில் ஈ.வெ.ரா. எழுதியது:

“தமிழ்நாட்டில் இன்றைய நிலை எதிரிகளால் மிகவும் பரிகாசிக்கத் தக்கதும் பார்த்துப் பரிதாபப்படத்தக்கதுமாகவும் மாறியிருக்கிறது. நாடெங்கும் கலகம், காலித்தனம், நாசவேலை ஆகிய கேடுகள் தங்குதடையின்றி நடைபெறுகின்றன. பணக்காரரும் பார்ப்பனரும் சேர்ந்து தி.மு.க. ஆட்சியை ஒழிப்பதற்கான காரியத்தில் இந்திரா காங்கிரஸின் சலுகையும் தேவைப்பட்டதால், அதையும் வேண்டிய அளவு பெற்றுக்கொண்டு இப்போது திசைதிருப்பிவிடும் தந்திரமாக இதற்கு எம்.ஜி.ஆர். கிளர்ச்சி என்று பெயர் தந்துவிட்டனர்.

தி.மு.க.வுக்குக் கலைத்துறையில் தொடுப்பு இருந்ததால், எம்.ஜி.ஆர். அங்கிருந்து அரசியலுக்கு இழுக்கப்பட்டு, மெல்ல பொருளாளராகவும் ஆகிவிட்டார். இந்த வளர்ச்சியைக் காட்டி தனக்கு மந்திரிப் பதவி கேட்டாராம். மதுரை மாநாட்டில் வரம்புமீறி பேசிவிட்டதாலும் பிணக்கு ஏற்பட்டதாம். இதெல்லாம் தி.மு.க.வை விட்டு வெளியேறுவதற்கான சாக்குதான்” என்று எழுதினார்.

இதை அடுத்து அதே மாதம் 24ம் தேதி “எம்.ஜி.ஆருக்கு அறிவுரை” என்ற தலைப்பில் தலையங்கமும் தீட்டினார் ஈ.வெ.ரா. “எம்.ஜி.ஆர். ஒரு கலைஞர். எனக்கு அந்தத் துறையில் அனுபவம் இல்லை.

சுயபுத்திக் கொள்கை உடைய நடிகரின் நாடகம்தான் நான் பார்ப்பேன். இரண்டொரு சினிமா பார்த்திருக்கிறேன். சிவாஜி கணேசன், எம்.ஆர்.ராதா ஆகியோரை எனக்கு நன்றாகத் தெரியும். இவரை எனக்குத் தெரியாது. இரண்டொரு நிகழ்ச்சிகளில் பார்த்தபோது வணக்கம் தெரிவித்தார். நானும் பதில் வணக்கம் தெரிவித்தேன். இவருக்கு இனி கலைத்துறையில் வீழ்ச்சிதான்" என்று எழுதினார் ஈ.வெ.ரா. இப்படியாக ஈ.வெ.ரா.வின் வசைபாடல் தொடர்ந்தது.

எம்.ஜி.ஆர். பற்றி 01.11.1972 அன்று விடுதலையில் எழுதிய தலையங்கத்திற்கு ஈ.வெ.ரா கொடுத்த தலைப்பு "அயோக்கியர், அயோக்கியர், மகா அயோக்கியர்".

தலையங்கத்தில் "பதவியின் பெயரால் பல சலுகைகளைப் பெற்று, அவற்றாலும் பணம் சம்பாதித்துக் கொண்டு, தகுதிக்கு மேற்பட்ட சொத்தும் அந்தஸ்தும் வருவாய்க்கு வழிதேடிக் கொண்டதைத் தவிர வேறு காரியத்துக்குப் பயன்படாத அனாமதேயங்கள் சுயநலக் கட்சியைக் காட்டிக்கொடுக்க விலைபேசி. வாங்கி, வேறு கட்சி எனும் பெயரால், தானிருந்த கட்சிக்கு மனமறிந்து கேடு செய்யும் கட்சிக்குப்போய் தன்பெயரைக் கொடுப்பதும் தன்னை ஆளாக்கிய கட்சியைக் குறை கூறுவதும் அக்கட்சியை ஒழிக்கப் பாடுபடுவதும் அதற்குத் தன் பெயரைக் கொடுப்பதுமான காரியத்தில் ஈடுபடுவதைத்தான் —நான் அயோக்கியம், அயோக்கியத்தன்மை என்றும், அயோக்கியர் என்றும், மேலும் அப்படிப்பட்டவர் மஹா அயோக்கியர் என்றும் பொதுநன்மையை உத்தேசித்துக் கூறுகிறேன்" என்று எழுதினார் ஈ.வெ.ரா.

ஈ.வெ.ரா காரமாகக் கட்டுரை எழுதினாலும், எவ்வளவு கடுமையாக எம்.ஜி.ஆரைத் தாக்கினாலும், மக்கள் அவரை மதிக்கவில்லை. தமிழ்நாட்டின் அனைத்து ஊர்களிலும் நகரங்களிலும் சிற்றூர்களிலும் எம்.ஜி.ஆருக்கு ஆதரவாக ஊர்வலங்கள் நடத்தப்பட்டன. விருத்தாசலத்தில் மூவாயிரம் கலைக் கல்லூரி மாணவர்கள் திரண்டு பேரணி நடத்தினார்கள். கூட்டத்தைக் கலைக்க போலீசார் தடியடி

நடத்தினார்கள். அதைத் தொடர்ந்து துப்பாக்கிச் சூடும் நடந்தது. ஐநூறு மாணவர்களுக்கு மேல் இதில் காயமடைந்தார்கள்.

மக்கள் ஆதரவு தனக்கிருக்கிறது என்பதனை உணர்ந்து கொண்ட எம்.ஜி.ஆர். வேறு வழியாகக் காய் நகர்த்தினார். தமிழக சட்டமன்றத்தின் சபாநாயகராக இருந்த மதியழகன் அக்டோபர் 27ம் தேதி அன்று எம்.ஜி.ஆரைச் சந்தித்தார். இது கருணாநிதிக்கு மிகப் பெரிய பயத்தை உண்டாக்கியது. கருணாநிதியின் எதிர்வினை உளறலின் உச்சக்கட்டமாக இருந்தது. “எங்களாட்சி கவிழ்க்கப்பட்டாலும் வரப்போகிற ஆட்சி காமராஜருடைய ஆட்சியாகத்தான் இருக்கும். காமராஜரின் ஆட்சி தமிழரின் ஆட்சிதான், தமிழரின் ஆட்சிதான் வரவேண்டுமென்று விரும்புவோமே தவிர தமிழ்ப¢ பகைவர்களின் ஆட்சியை ஒருக்காலும் விரும்பமாட்டோம்” என்று பேசினார் கருணாநிதி (01.11.72).

கருணாநிதியின் இனவெறி பேச்சுக்கள் தொடர்ந்து கொண்டிருந்த வேளையில் கருணாநிதியின் அமைச்சரவை மீது ஊழல் குற்றச்சாட்டுப் பட்டியலை எம்.ஜி.ஆர். தயாரித்துவிட்டார்.

# 17. மணி அடித்தவரெல்லாம் சபாநாயகர்

எம்.ஜி.ஆர், தி.மு.க.விலிருந்து வெளியேறிய காலகட்டத்தில், ஈ.வெ.ரா. அவர் மீது தொடர்ந்து வசை பாடினார் என்பதைப் பார்த்தோம். ஆனால், எதிர்பாராத திசையிலிருந்து எம்.ஜி.ஆருக்கு ஆதரவு கிடைத்தது. ராஜாஜி, எம்.ஜி.ஆரை ஆதரித்து ஒரு அறிக்கையை வெளியிட்டார். எம்.ஜி.ஆர். தன்னுடைய கட்சிக்காரர்களை அழைத்துக்கொண்டு ராஜாஜியின் இல்லத்திற்குச் சென்றார்.

ராஜாஜியின் இல்லத்தில் அனைவருக்கும் காபி வழங்கப்பட்டது. எம்.ஜி.ஆருக்குக் காபி சாப்பிடும் பழக்கம் இல்லாததால், அவருக்கு மட்டும் மோர் வழங்கப்பட்டது. ராஜாஜி, “இந்த தர்மயுத்தத்தில் நீங்கள் வெற்றி பெறுவதை யாராலும் தடுக்க முடியாது. உங்களையும், உங்கள் ஆதரவாளர்களையும் நான் பாராட்டுகிறேன்” என்று சொல்லி ஆசீர்வதித்தார். எம்.ஜி.ஆர். இதை நெகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டார்.

தன்னுடைய அடுத்த நடவடிக்கையாக, கருணாநிதி அரசு மீது ஒரு ஊழல் பட்டியலைத் தயாரித்தார் எம்.ஜி.ஆர். அன்றைய தமிழ்நாடு ஆளுநராக இருந்த கே.கே.ஷாவைச் சந்தித்து, அண்ணா திமுகவின் சார்பில் இந்தப் பட்டியல் கொடுக்கப்பட்டது. இந்திய கம்யூனிஸ்ட் சார்பிலும் ஒரு ஊழல் பட்டியல் கொடுக்கப்பட்டது.

இதைத்தொடர்ந்து எம்.ஜி.ஆர். டெல்லிக்கு போனார். குடியரசுத் தலைவர் வி.வி.கிரியைச் சந்தித்து, 32 பக்கங்கள் கொண்ட ஊழல் பட்டியலைக் கொடுத்தார். அதேநேரத்தில், இந்திய கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் 40 பக்கங்கள் கொண்ட ஊழல் பட்டியல் கொடுக்கப்பட்டது.

மீண்டும் நவம்பர் 10ம் தேதி, தமிழ்நாடு ஆளுநர் கே.கே.ஷாவை சந்தித்து, மீண்டும் ஒரு ஊழல் பட்டியல் கொடுக்கப்பட்டது. இந்த பட்டியலைவிட இது கொடுக்கப்பட்ட விதம் தமிழக அரசியல் காணாத ஒரு அதிசயமாக இருந்தது. லட்சக்கணக்கான மக்களைத் திரட்டி,

ஊர்வலம் நடத்தி, அதன் முடிவில் இந்த பட்டியல் ஆளுநர் வசம் ஒப்படைக்கப்பட்டது.

இதற்கிடையே மக்கள் மன்றத்தில் பரீட்சை செய்து தன்னுடைய வலிமையைத் தெரிந்து கொண்ட எம்.ஜி.ஆர்., தன் கவனத்தை சட்டமன்றத்தின் பக்கம் திருப்பினார். அவருக்கு சட்டமன்ற சபாநாயகர் மதியழகனின் ஆதரவு இருந்தது.

தமிழ்நாடு சட்டமன்றம் 12.09.1977ல் கூடியது. எம்.ஜி.ஆர். “இந்த அமைச்சரவை சொந்தக் கட்சியின் நம்பிக்கையையும் பொதுமக்களின் நம்பிக்கையையும் இழந்துவிட்டது. இந்தச்சூழலில் இந்த அமைச்சரவை நீடிப்பது சரியா?” என்று கேள்வி எழுப்பினார். இதற்கு பதில் அளித்த கருணாநிதி, இதை விவாதத்துக்கு எடுத்துக்கொள்ளத் தயார் என்று சொன்னார்.

சபாநாயகர் கே.ஏ.மதியழகன், “இங்கு தோன்றியுள்ள அசாதாரணமான சூழ்நிலைக்குத் தீர்வாகச் சட்டசபையைக் கலைக்கும்படி கவர்னருக்கு முதலமைச்சர் சிபாரிசு செய்யவேண்டும் என்பது என்னுடைய யோசனை, எம்.ஜி.ஆரின் கேள்விக்கு முதலமைச்சர் ஏதாவது சொல்ல விரும்புகிறாரா?” என்று கேட்டார்.

இந்தக் கேள்விக்கு கருணாநிதி பதில் அளிக்கவில்லை. சபையை 05.12.1972 வரை ஒத்திவைப்பதாக சபாநாயகர் அறிவித்தார். தி.மு.க. சார்பில் சட்டநிபுணர்களிடம் ஆலோசனை கேட்கப்பட்டது. சபாநாயகர் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவருவது என்று முடிவு செய்யப்பட்டது. 02.12.1972—ல் சட்டமன்றம் கூடியவுடன் திமுக சார்பில், “185 உறுப்பினர்கள் தற்போதைய சபாநாயகர் பதவியிலிருந்து விலக வேண்டுமென்று தீர்மானம் கொண்டு வந்திருக்கிறோம். அந்தத் தீர்மானத்தை விவாதத்திற்கு எடுத்துக்கொள்ள வேண்டும்” என்று சொல்லப்பட்டது.

அமைச்சர் நெடுஞ்செழியன், “இந்த விவாதத்தின்போது சபாநாயகர் அவைக்குத் தலைமை தாங்கக் கூடாது. துணை சபாநாயகரை இந்த

அவைக்குத் தலைமை தாங்க அழைக்கிறேன்” என்றார்.

இதையடுத்து அரங்கேறிய காட்சிகள் தமிழகத்தின் சட்டமன்ற வரலாற்றில் ஒரு கருப்பு அத்தியாயம் என்றே சொல்லவேண்டும். பிற்காலத்தில் நடக்கப்போகிற பல சட்டமன்ற கேலிக்கூத்துகளுக்கு இதுவே முன்னோடியாக அமைந்தது. சபாநாயகரின் இருக்கைக்குக¢ கீழே தனியாக நாற்காலி ஒன்று போடப்பட்டது. துணை சபாநாயகர் பெ.சீனிவாசன் அதில் உட்கார வைக்கப்பட்டார். ரொம்ப புத்திசாலியாகச் செயல்பட்ட ஒரு தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர், மதியழகனின் மேசையிலிருந்த மணியை எடுத்துவந்து சீனிவாசனிடம் கொடுத்துவிட்டார். மணி அடித்தவரெல்லாம் சபாநாயகராகிவிடலாம் என்பதுதான் அவரது அரசியல் அறிவு.

அமைச்சரவை மீது கொடுத்துள்ள நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை விவாதத்துக்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று அ.தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர்கள் குரல் எழுப்பினார்கள். அ.தி.மு.க.வின் தீர்மானத்தை விவாதத்துக்கு எடுத்துக்கொள்வதாக சபாநாயகர் மதியழகன் அறிவித்தார். எம்.ஜி.ஆர். எழுந்து நின்று பேசினார். ஆனால், தி.மு.க.வின் தாக்குதல் வேறுவிதமாக இருந்தது. சபாநாயகருக்கும் எம்.ஜி.ஆருக்கும் மைக் இணைப்பு துண்டிக்கப்பட்டு விட்டது.

இதே நேரத்தில், இதே அவையில் துணை சபாநாயகர் சீனிவாசன், “சபாநாயகர் மீதான நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை” எடுத்துக் கொள்வதாக அறிவித்தார். கூச்சலுக்கும் குழப்பத்துக்கும் நடுவே அந்தத் தீர்மானம் வாக்கெடுப்புக்கு விடப்பட்டு மதியழகன் சபாநாயகர் பதவியிலிருந்து விலக்கப்பட்டார்.

# 18. சரணாகதியும் பிரிவினை எதிர்ப்பும்

எம்.ஜி.ஆருக்கும் கருணாநிதிக்கும் சட்டமன்றத்தில் நடந்த மோதல்கள் ஒருபுறம் இருக்க, எம்.ஜி.ஆர். நடித்த திரைப்படமான **'உலகம் சுற்றும் வாலிபன்'** படப்பிடிப்பு சிங்கப்பூரில் சுறுசுறுப்பாக நடந்து வெளிவரத் தயாராக இருந்தது. இந்தப்படம் வெளிவரக் கூடாது என்பத¤ல் தி.மு.க.வினர் முனைப்பாக இருந்தனர். மதுரை முத்து என்ற தி.மு.க. தலைவர் சவாலாகவே இதை எடுத்துக் கொண்டார்.

தி.மு.க.வினரின் எதிர்ப்பை சமாளிப்பதற்காக படத்துடைய பிராஸஸிங் வேலை வேறு மாநிலத்தில் செய்யப்பட்டு பிரிண்ட் போடப்பட்டது.

ஆனால், எல்லா எதிர்ப்புகளையும் முறியடித்து உலகம் சுற்றும் வாலிபன் திரைப்படம் வெளியிடப்பட்டு வசூலில் சாதனை படைத்தது. (மே 11, 1972).

உலகம் சுற்றும் வாலிபனை வெளியிட விடமாட்டேன், வெளிவந்தால் சேலை கட்டிக்கொள்வேன் என்று சவால்விட்ட மதுரை முத்துவுக்கு அ.தி.மு.க.வினர் நூற்றுக்கணக்கான சேலைகளை அனுப்பினர்.

அதுமட்டுமல்ல, அ.தி.மு.க.வினரின் எதிர்ப்பைத் தாங்கமுடியாமல் மதுரை முத்து எம்.ஜி.ஆரிடம் சரணடைந்துவிட்டார். அ.தி.மு.க.வில் உறுப்பினராகி விட்டார்.

எம்.ஜி.ஆரின் அடுத்த வெற்றி திண்டுக்கல்லில் காத்திருந்தது. மே 20 என்று நாள் குறிக்கப்பட்ட திண்டுக்கல் நாடாளுமன்ற இடைத்தேர்தலில் முதன்முறையாக எம்.ஜி.ஆரின் அ.தி.மு.க, களத்தில் இறங்கியது.

பத்திரிகையாளர்களின் பாஷையில் திண்டுக்கல் தேர்தல் பூமியாக இல்லை; யுத்த பூமியாக இருந்தது. தி.மு.க.வினரால் ஏற்படுத்தப்பட்ட கடுமையான வன்முறையை அ.தி.மு.க.வினர் எதிர்கொள்ள வேண்டியிருந்தது.

எது எப்படியிருந்தாலும் மக்களுடைய செல்வாக்கு எம்.ஜி.ஆரின் பக்கம்தான் என்பதை திண்டுக்கல் இடைத்தேர்தல் முடிவு உணர்த்தியது.

மொத்த வாக்குகள் : 5,05,253

மாயத்தேவர் (அதிமுக) : 2,60,930

என்.எஸ்.வி.சித்தன் (ஸ்தாபன காங்.) : 1,19,032

பொன்.முத்துராமலிங்கம் (திமுக) : 93,496

கரு.சீமைச்சாமி (இ,காங்.) : 11,423

**‘எம்.ஜி.ஆர் தமிழர் இல்லை. எனவே அவருடைய கட்சிக்கு ஆதரவு தரக்கூடாது’** என்று சொல்லி இந்த இடைத்தேர்தலில் முதலமைச்சர் கருணாநிதி பிரச்சாரம் செய்தார். இனவெறியைத் தூண்டும் அந்தக் கோரிக்கையை மக்கள் முறியடித்து விட்டார்கள். ஆளும் கட்சியான தி.மு.க.வுக்கு மூன்றாவது இடம் என்பதிலிருந்தே கருணாநிதிக்கு எதிர்ப்பு எவ்வளவு தூரம் இருந்திருக்கிறது என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

இந்தச் சூழ்நிலையில் திண்டுக்கல் தோல்வியை கௌரவப் பிரச்சினையாகக் காட்டிக் கொள்ள கருணாநிதி கட்சிப் பதவியிலிருந்து விலக இருப்பதாக சொல்லப்பட்டது. ஊர்ஜிதம் செய்யப்படாத இந்த செய்தி வெளிவந்தவுடனே ஈ.வெ.ரா.வுக்கு பொறுக்கவில்லை. அவர் இதை கைவிடுமாறு கேட்டுக்கொண்டார். கருணாநிதியும் உடன்பட்டார்.

இந்தச் சூழலில் குமுதம் (25.10.1973) வார இதழுக்கு எம்.ஜி.ஆர். கொடுத்த பேட்டியில் சில விஷயங்கள் தெளிவாக்கப்பட்டன. அதிலிருந்து ஒரு பகுதியை இங்கு கொடுக்கிறேன்.

கேள்வி: பெரியார் பகிரங்கமாக பிரிவினை கேட்கிறார். தெய்வப் படங்களை இழிவுபடுத்துகிறார். நீங்கள் அவருக்கு சிலை வைப்பதாகக் கூறியிருக்கிறீர்கள். அப்படியானால் அவரது கருத்துக்களை நீங்கள் ஆதரிப்பதாகத்தானே பொருள்?

பதில்: ஒருவரைப் பாராட்டுகிறோம் என்பதற்காகவோ அவருக்கு சிலை வைக்கிறோம் என்பதற்காகவோ அவருடைய கொள்கைகள் அனைத்தையும் ஏற்றுக்கொண்டிருப்பதாக சொல்ல முடியாது. முன்பு ஐயா அவர்கள் கடவுள் சிலைகளை உடைத்தபோது அண்ணா அவர்கள் அதை ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால், அதற்காக ஐயாவின் சமுதாய சீர்திருத்தக் கருத்துக்களை ஏற்றுக் கொள்ளவில்லை என்றும் கூறமுடியாதல்லவா? அதைப்போல பிரிவினை கேட்பது ஐயாவின் கருத்து. நாங்கள் அதை எதிர்க்கிறோம்.

என்று குறிப்பிட்டார் எம்.ஜி.ஆர்.

# 19. “ஹிந்துக்கள்தான் மதமாற்றப்படுகிறார்கள்”: எம்.ஜி.ஆர்.

திண்டுக்கல் இடைத்தேர்தலில் தி.மு.க. அடைந்த வரலாறு காணாத தோல்வியைப பார்த்தோம்.

அடுத்த சில ஆண்டுகளில், அகில இந்திய அளவில் அரங்கேறிய சில அரசியல் நிகழ்வுகள் ஒட்டுமொத்த இந்திய அரசியலில் பெரும் பாதிப்பை ஏற்படுத்தின. தமிழகமும் அதற்குத் தப்பவில்லை.

பிரதமர் இந்திரா காந்தியின் தேர்தல் குறித்த அலகாபாத் உயர்நீதிமன்றத் தீர்ப்பு அதைச் சமாளிப்பதற்காக இந்திரா காந்தி அமல்படுத்திய அவசரநிலை என்பவை வரலாற்றின் இருண்ட பகுதிகள்.

இந்தியாவே சிறைக்குள் முடக்கப்பட்டது. இறுதியாக ஜனவரி 18, 1977 தேதியில் நாடாளுமன்றத் தேர்தல் அறிவிக்கப்பட்டது. தமிழ்நாட்டில் அ.தி.மு.க.வும் அதன் கூட்டணிக் கட்சியான இந்திரா காங்கிரஸும் வெற்றி பெற்றன.

பிறகு நடந்த தமிழ்நாடு சட்டமன்ற தேர்தலின் முடிவுகள் அ.தி.மு.க.வுக்கு சாதகமாக இருந்தன. (15.06.1977).

அ.தி.மு.க. மட¢டும¢— 130, அ.தி.மு.க அணிக்கு 143 இடங்கள் கிடைத்தன. கட்சி தொடங்கி ஐந்தாவது ஆண்டில் தமிழகத்தின் ஆட்சியை அ.தி.மு.க. கைப்பற்றியது. எம்.ஜி.ஆர்.முதலமைச்சராகப் பதவி ஏற்றுக்கொண்டார் (30.06.1977). கருணாநிதியால் தனக்கு மறுக்கப்பட்ட சுகாதாரத் துறையை எம்.ஜி.ஆர். இந்தமுறை தனக்கே எடுத்துக்கொண்டார்.

இடைப்பட்ட காலத்தில், ஹிந்துமதம் தொடர்பான பல்வேறு விஷயங்களைப் பற்றிய எம்.ஜி.ஆரின் கருத்து என்ன என்பதைத்

தெரிந்துகொள்ள அவர் எழுதிய தொடரிலிருந்து சில பகுதிகளைக் கொடுக்கிறேன்.

—நான் ஏன் பிறந்தேன் (ஆனந்த விகடன், 02.01.1972).

“ஹிந்து மதத்தின் உண்மை லட்சியம், மனிதப் பாகுபாடோ, மத வேறுபாடோ காணாதது என்று அதை ஓரளவு புரிந்து கொண்டவர்கள் கூட மார்தட்டிச் சொல்லலாம். ஆனால், ஹிந்து மதத்தில் வேறு எந்த மதத்தினரையும் சேர்த்துக்கொள்ள முடிவதில்லை. ஆனால், வேறு மதத்தினர்களோ கொஞ்சம் கொஞ்சமாக ஹிந்து மதத்தினரைத் தங்கள் மதத்திற்கு மாற்றிக் கொள்கிறார்கள்”.

“பாகிஸ்தானுக்கோ அல்லது வேறு முஸ்லிம் நாட்டிற்கோ ஏதாவது பிரச்சினை என்றால் உடனே முஸ்லிம் நாடுகள் அதைத் தங்கள் மதப் பிரச்சினையாக்கிக் கொள்கிறார்கள். அதாவது முஸ்லிம் நாடுகளுக்குள் சண்டை என்றால், அது மதப் பிரச்சினை அல்ல. பொதுவாக வேற்றுமத நம்பிக்கை உள்ள அரசோடு வேற்று மத நம்பிக்கைகொண்ட அரசு மோதுகிறதென்றால், குறிப்பிட்ட மதத்தைச் சேர்ந்த நாடுகள் அதோடு சேர்ந்து விடுகின்றன. அல்லது அனுதாபம் காட்டுகின்றன”.

“ஆனால், இந்தியத் துணைக் கண்டத்தைப் பொறுத்தவரை, நாம் எவ்வளவுதான் மத அடிப்படையில் அரசியல் அமைப்போ ஆட்சியோ இல்லாமல், மனிதத் தன்மையோடு, மனித உணர்வோடு செயல்பட்டாலும், நமக்கு ஆதரவு தர ஹிந்து மதத்தினர் யாரும் வெளிநாட்டில் இல்லை என்பதற்கு நியாயமான காரணத்தை நாம் இனியாவது புரிந்துகொள்ள வேண்டாமா?”

“உலகத்தில் எந்த நாட்டிலும் சரி, சட்டம் எல்லோருக்கும் ஒரே மாதிரியாகத்தான¢ இருக்கும். அது முஸ்லிம் நாடானாலும், கிற¤ஸ்தவ நாடானாலும், சர்வாதிகார நாடானாலும், சமதர்ம நாடானாலும், ஜனநாயக நாடானாலும் சரிதான்”.

“இன ஒதுக்கல் சம்பந்தப்பட்ட நாடாக இருந்தாலும் வெள்ளையர், கறுப்பர் என்ற வேறுபாட்டில் சட்டங்கள் இருந்தாலும் கறுப்பர்களுக்குள்ளேயே வெவ்வேறு விதமாகச் சட்டம் இருப்பதாக நான் நினைத்ததில்லை. ஆனால், இந்தியத் துணைக்கண்டம் மதச்சார்பற்ற நாடாக இருப்பதால், அதனுடைய சட்ட விதிகள் மதத்தின் நம்பிக்கை முறைகளுக்கு முரண்படாத விதத்தில் அமைக்கப்பட்டிருக்கின்றன”.

“உதாரணத்திற்கு ஒன்றை மட்டும் குறிப்பிடுகின்றேன். பலதாரத் தடை, இந்துக்களுக்கு மட்டும்தான். முஸ்லிம்களுக்கு இல்லை”.

‘பசுவைக் கொல்லக் கூடாது. அது தாயைக் கொல்லுவது போல’ என்று நம்பும் மத நம்பிக்கையுள்ள ஹிந்துக்களைக் கொண்ட இந்தியாவில், பசுவதையைத் தடை செய்ய எத்தனையோ பேர் முயன்றும் தடைச்சட்டம் நிறைவேற்றப்படவில்லை”

என்று எழுதினார் எம்.ஜி.ஆர்.

# 20. “அன்னை தந்த சொத்து ஆன்மிகம்”

ஆனந்த விகடன் வார இதழில் எம்.ஜி.ஆர் எழுதிய தொடர் கட்டுரை “நான் ஏன் பிறந்தேன்?” (1972). ஹிந்து சமயத்தின் மீது எம்.ஜி.ஆர் கொண்டிருந்த பற்றும் அக்கறையும் இதில் தெளிவாக வெளிப்பட்டது.

அதில், “ஹிந்து மதத்தில் பிற மதத்தவர் சேர்ந்து கொள்ள அனுமதியில்லை. எனவே, இருப்பவர்களின் குழந்தைகள் எத்தனையோ அத்தனை பேர் மட்டும்தான் எதிர்காலத்தில் ஹிந்துக்களாக இருப்பார்கள். ‘நாமிருவர், நமக்குப் பிறப்பவர்களும் இருவர்’. இதன்படி, எல்லோருக்கும் இப்படி குழந்தைகள் பிறந்து, அவர்களுக்கும் இருவர் பிறக்கும்வரை உயிரோடிருந்தால், ஒரு வகையில் குறையாதிருக்கலாம். ஆனால், உயிரோடிருப்பவர்களில் எத்தனை பேர் வேற்று மதத்தினராகாமல் இருப்பார்கள் என்பதற்கு எந்த உத்தரவாதமும் இல்லை”.

“எனவே ஹிந்து மதம் கரைந்து கொண்டிருக்கிறது. மக்கள் எண்ணிக்கையிலும் கூட. ஆனால், வேற்று மதத்தினர் வளர்ந்து கொண்டிருக்கிறார்கள், எண்ணிக்கையிலும்கூட”.

“பாகிஸ்தான் என்ற ஒரு நாடு, சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு எங்கிருந்தது? அது எப்போது தோன்றியது? இப்படி இந்தியா, மனித எண்ணிக்கையிலும் நிலப்பரப்பியல் கோட்பாடுகளிலும் தன்னைத்தானே அழித்துக் கொண்டு, உண்மை ஹிந்து தர்மப்படி, ‘பிறருக்காக வாழ்வதே மாந்தர் கடமை’ என்று நம்பி, சொல்லி, செயல்படுவதை நமது பலஹீனம் எனக் கருதி, நம்மை மேலும் மேலும் அழிக்க நினைக்கும் பகைவர்களையும் தீய எண்ணம் கொண்ட வெளிநாட்டவர்களையும் நாம் பல முனைகளில் சந்தித்தே தீரவேண்டிய நிர்பந்தத்திற்கு ஆளாக்கப்பட்டு விட்டோம்” என்று எழுதினார் எம்.ஜி.ஆர்.

ஹிந்து மதம் தொடர்பான விஷயங்களில் எம்.ஜி.ஆர் எந்தப்பக்கம் இருந்தார் என்பதைப் பார்த்தோம். இதையே இன்னும் தெளிவாகப்

புரிந்து கொள்வதற்காக கே.ரவீந்தர் எழுதிய ‘விழா நாயகன் எம்.ஜி.ஆர்’ என்ற புத்தகத்திலிருந்து சில பகுதிகளைக் கொடுக்கிறேன். கே.ரவீந்தர், எம்.ஜி.ஆர் அவர்களோடு 35 ஆண்டுகளுக்கும் மேலாக பழகியவர். இஸ்லாமியர். திரைப்படத்துறையில் வசனகர்த்தா. எம்.ஜி.ஆரின் வீடு பற்றிய வர்ணனையைக் கொடுக்கிறார் அவர்.

பாக்குத் தோட்டம், தென்னந்தோப்பு, நெல் வயல், காய்கறித் தோட்டம், சிறிய மாட்டுப்பண்ணை. அவைகளில் ஒரு பசு மாட்டின் பால் மட்டும் அவருக்காக காய்ச்சி வைக்கப்படும். காலை, மாலை அந்த மாட்டுப்பால் அவர் எங்கிருந்தாலும் வரும். அதற்கும் பலர் பங்குக்கு வருவர். பால் தரும் பசுவையும் அன்னையையும் ஒப்பிட்டு, ‘நாடோடி மன்ன’னில் எம்.என்.ராஜத்துக்கு ஒரு வசனமே இருக்கும்.

இந்த ராமாவரம் வீட்டைக் கட்டும்போது ஒரு நிலவறை வைக்கச் சொன்னார். அப்படியே வைத்தார்கள். கறுப்புப் பணத்தைப் பதுக்க அவர் அப்படிச் செய்கிறார் என்று சிலர் சொன்னார்கள். தன்னை நாடி வருபவர்கள் காத்திருக்க நேர்ந்தால், வசதியாக உட்கார வீட்டை அடுத்து ஒரு சிறு வீடு குளியலறை வசதியுடன் கட்டியிருந்தார். இரவு நேரங்களில் காரோட்டிகள் அங்கு தங்க உதவியாக இருக்கும். அந்த வீட்டின் வலதுபுற அறைக்குள் இந்தச் சுரங்க அறை, அதற்குள் பல்லாயிரம் மதிப்புள்ள, இன்னும் விலை தரமுடியாத செல்வங்கள் இருந்தன. அத்தனையும் தமிழ் புத்தகங்கள். சுவரைச் சுற்றி அலமாரிகள். அதனுள் தமிழ்க்காவியங்கள் இருந்தன.

அந்த நிலவறையில் கம்பர், வால்மீகியின் கிஷ்கிந்தா காண்டம் இருந்தது. ராஜாஜி அவர்கள் எழுதிய சக்கரவர்த்தித் திருமகனும், மகாபாரதத்தில் இரண்டு விதமான பதிப்புகள், கல்கியின் படைப்புகள், காண்டேகர், சுத்தானந்த பாரதியாரின் மேற்கத்திய இலக்கிய மொழிபெயர்ப்புகள், திருக்குறள், மு.வ. அவர்களது எழுத்தோவியங்கள், எம்.ஆர்.எம்.அப்துல் ரஹீம் அவர்களது சிந்தனைச் செல்வங்கள், தமிழ் அகராதி இப்படி 1,500 புத்தகங்கள்

இருந்தன. செம்மல் படிப்பார். சில சமயம் கண்மூடி சிந்தனை செய்வார். அது தியானமா, மௌன விரதமா தெரியாது. அங்கிருந்த செம்மலின் அன்னையின் படத்தின் பின்னால், ஒரு சிறு பழைய புத்தகம் இருந்தது. குருவாயூரப்பன் சுலோகம், ‘என் அன்னை அதை தினமும் பாராயணம் செய்துவந்தார். அதுதான் என் பெரும் சொத்து’ என்றார் செம்மல்.

# 21. “எனக்கு எல்லோரும் சமம்” — எம்.ஜி.ஆர்.

எம்.ஜி.ஆர். பற்றி கே.ரவீந்தர் எழுதுகிறார்: எம்.ஜி.ஆரை இவர் ‘செம்மல்’ என்று குறிப்பிடுகிறார்.

1954ல், அப்போதெல்லாம் பகல் வேளையில் கவிஞர் கண்ணதாசன், கலைஞர், கே.ஆர்.ராமசாமி, சிவாஜி கணேசன் எல்லோரும் புடைசூழ லாயிட்ஸ் ரோடு தாய் வீட்டுக்கு வருவார். பெரும்பாலும் இவர்களது பகல் உணவு அந்தத¢ தாய் வீட்டில்தான். ஒருநாள் சிவாஜி கணேசன் களைத்து வந்தார். “மனோகரா படப்பிடிப்பு சங்கிலி காட்சி” என்று சொன்னார். அப்போதெல்லாம் படப்பிடிப்பு நேரம் 7 முதல் 1 வரை. பிறகு பகல் 2 முதல் இரவு 9 வரை. கன்னடம், மலையாளப் படங்கள் இரவு 10 மணி முதல் மறுநாள் காலை 6 மணி வரை நடைபெறும்.

சிவாஜி அவர்களுக்கு டீ கொடுத்தார் செம்மல். அப்போதெல்லாம் செம்மல் டீயை விரும்பி குடிப்பார். சிவாஜி அவர்கள் டீ குடித்ததையும் கொஞ்சமும் மிச்சம் வைக்காமல் குடித்துவிட்டு டம்ளரை வைப்பதையும் பார்த்துக் கொண்டிருந்தேன். என் மனதில் பழைய நினைவுகள் தோன்றின. சிவாஜி அவர்கள் போனதும், எழுத்தை மட்டுமல்ல எண்ணத்தையும் படித்துவிடும் செம்மல் “ஏன் ரவீந்திரன், சிவாஜியை இப்படிப் பார்த்தீர்? தம்பி குடித்துவிட்டு வைத்த டம்ளரையும் பார்த்தீர்? என்ன விஷயம்?” என்று கேட்டார்.

“ஒண்ணுமில்லை, வசதியில்லாதபோது எல்லாத்தையும் சாப்பிடுவாங்க, வசதி வந்தப்புறம் சிலபேர் பெருமைக்காக பாதி மிச்சம் வெச்சிருவாங்க. எங்க மார்க்கத்துல அது பாவம். அதனால் பார்த்தேன்” என்றேன்.

“அப்படின்னா, சிவாஜியை உனக்கு முன்னாலேயே தெரியுமா?” என்று கேட்டார்.

நான் நடந்ததைச் சொன்னேன்! “1946ல் நாகூர் ஆண்டவர் உற்சவத்தின்போது அங்கே 20 நாள் பராசக்தி நாடகம் நடந்தது. நாடகத்துக்கு நல்ல கூட்டம். நல்ல பேர். காண்ட்ராக்ட் எடுத்து நடத்தியவர் எங்க ஊர் போஸ்ட்மேன். நாடகத்தை நானும் பார்த்தேன். அப்போது நான் மாதாந்திர பத்திரிகை நடத்திக் கொண்டிருந்தேன். என் பத்திரிகை நிர்வாகிகள் நாடகத்தில் நடித்த ஹீரோவைக் கூட்டிவந்து, ‘இவங்கதான் நீங்க பாராட்டிய ஹீரோ கணேசன்’ என்று அறிமுகப்படுத்தினார்கள். அன்று அந்த கதாநாயகனுக்கு ஒரு கப் டீ கொடுத்து உபசரிக்கும் பாக்கியம் பெற்றிருந்தேன்” என்று சொன்னேன்.

செம்மல் சொன்னார். “அன்னைக்கு நீ பார்த்த கணேசன், இன்னைக்கு சிவாஜி கணேசனா, ஒரு பெரிய நடிகரா இருப்பதற்கு காரணம் உழைப்பு, விடாமுயற்சி, தெய்வ நம்பிக்கை, நம்முடைய முயற்சிகள் வெற்றியடைய அவன் நம் நெற்றியில் எழுதியிருக்கணும். அந்த எழுத்து இல்லேன்னா நாம என்ன உழைச்சாலும் பலன் இருக்காது. யார், யார் எப்படி இருக்கணும்னு நியமனம் இருக்கு”

இதே புத்தகத்தில் இருந்து: “செம்மல் நாத்திகர் அல்ல. தன் தாயை தெய்வமாக தொழுதார். செம்மலை ஆலயப்பிரவேசம் செய்ய வைத்த பெருமை இறையருட்செல்வர், இயக்குனர் கே.சங்கருக்கு உண்டு. அவர் மூகாம்பிகை கோயிலுக்குச் செம்மலை அழைத்துச் சென்றார். தனக்குப் பரிசாகக் கிடைத்த தங்கவாளை எம்.ஜி.ஆர். மூகாம்பிகை அம்மனுக்குக் காணிக்கையாகக் கொடுத்தார்” என்கிறார் கே.ரவீந்தர்.

பிராமணர்கள் குறித்த எம்.ஜி.ஆரின் கருத்து கவனத்துக்குரியது. ஒரு பேட்டியில் இது விஷயமாக எம்.ஜி.ஆர். கூறியதைக் கொடுக்கிறேன்:

தங்களுக்கு பார்ப்பணர்களைக் கண்டால் பிடிக்காது என்கிறார்களே உண்மையா?

“குலம் என்று ஒன்று இருப்பதோ, அந்த குலத்திற்கென்று தனிப்பட்ட தகுதிகள் இருப்பதோ கிடையாது என்ற முடிவுக்கு வந்திருக்கும்

காலம் இது. பார்ப்பனர்கள் எனப்படுபவர்கள் அத்தனை பேரும் விரும்பத் தகாதவர்கள் என்று கொண்டால், அந்த குலத்தைச் சேர்ந்தவர்களுக்குத் தனித்தன்மை என்று ஏற்றுக்கொள்வதாக ஆகும். அப்படியானால் ஒவ்வொரு வகுப்பாருக்கும் (குலத்தாருக்கும்) ஒவ்வொரு தனித்தன்மை இருப்பதாக ஏற்றுக்கொள்ள வேண்டிய நிர்பந்தம் ஏற்படும். உதாரணமாக குற்றப் பரம்பரை என்ற வகுப்பினர் இருந்தனர் என்பதும் யாரோ செய்த குற்றத்திற்கு அவரது பரம்பரையினரை பொறுப்பாளராக்குவது கூடாது என்றும் முடிவெடுத்து, குற்றப்பரம்பரை விலக்குச் சட்டம் கொண்டு வந்ததும் நாடு அறிந்ததே. ஆகவே, என்னைப் பொறுத்தவரை, சில தனிமனிதர்கள் செய்யும் தவறுக்கு, அவரது குடும்பத்தினரையோ, ‘வகுப்பு’ என்று அழைக்கப்படுகிற அமைப்பையோ குறை கூறுவது, சந்தேகப்படுவது சரியல்ல என்பது என் முடிவு.

என்னுடைய அந்தரங்கக் காரியதரிசியாகப் பணியாற்றும் என்.கே.டி.சாமி, ஆடிட்டர் என்.சி.ராஜகோபால், வழக்கறிஞர் வி.பி.ராமன், குடும்ப டாக்டர் வி.பி.ஆர்.சுப்பிரமணியம், எனது படக்கம்பெனியில் கதை இலாகாவிலும், ‘நடிகன் குரல்’ ஏட்டிலும் எனக்கு உற்ற துணையாகப் பணியாற்றும் வித்வான் வே.லட்சுமணன், என் வீட்டுக் குழந்தைகளுக்கு ஆசிரியராகவும் என்னால் நடத்தப்படுகிற கோடம்பாக்கம் பள்ளிக்கு நிர்வாகியாகவும் உள்ள நாராயணன் ஆகியோர் பார்ப்பன வகுப்பு என்று சொல்லப்படுகிற வகுப்பைச் சேர்ந்தவர்கள். இதிலிருந்தாவது எனக்கு ‘எல்லோரும் சமம்’ என்பதை உணர்வீர்கள் என்று நம்புகிறேன்” என்று கூறினார் எம்.ஜி.ஆர்.

# 22. “தூணிலும் இருப்பான் துரும்பிலும் இருப்பான்”

காரணமில்லாமல் பிராமணர்கள் மீது காழ்ப்புணர்ச்சி கொண்டிருந்தவர் ஈ.வெ.ரா. ஆனால், எம்.ஜி.ஆரிடம் இத்தகைய வெறுப்புக்கு இடமில்லை. அவர் சமூகத்தின் எல்லாப் பிரிவினரையும் அன்போடு அணுகினார். பொருளாதார இடஒதுக்கீடு தரவேண்டும் என்று அவர் முயற்சி செய்தார்.

கணையாழி ஜனவரி 1973 இதழுக்கு அளித்த பேட்டியில்— பிற்பட்ட வகுப்பினருக்குச் சலுகையும் வசதியும் தரவேண்டும் என்பது பற்றி உங்கள் கொள்கை என்ன?

“பிற்பட்ட வகுப்பினர் எண்ணும்போது பொருளாதார அடிப்படையில் பிற்பட்ட நிலையில் இருப்பவர், பிராமணர் உட்பட என்பது முக்கியம். நகரங்களில் வாழ்பவர்களைவிட கிராமங்களில் உள்ளவர்கள் பின்தங்கி இருக்கிறார்கள். உதாரணமாக, விவசாயிகளுக்கு தொழிலாளர்களுக்குள்ள வேலை உத்தரவாதம், போனஸ் என்று ஒன்றும் கிடையாது. வருஷத்தில் பல மாதங்கள் வேலையும் வருமானமுமில்லாத விவசாயிகளுக்கு வேலைவாய்ப்பு தர வேண்டும். இன்னும் பின்தங்கியவர்களுக்குப் பயன்படும் வகையில் கல்வி முறையில் பெரிய மாற்றம் வேண்டும். கிராமங்கள் வளம்பெற்றால்தான் நகரங்கள் வளம் பெறும். இப்போதைய நிலை நேர்மாறாக இருக்கிறது. நகரங்களுக்கே முக்கியத்துவமும் வளர்ச்சித் திட்டங்களின் பயன்களும் சேருகின்றன. இதனால் கிராமங்களில் இருந்து வேலை தேடி நகரங்களில் குடியேறிவிடுகிறார்கள். கிராமங்களும் விவசாயமும் சீரழிந்து விடுகின்றன” என்றார் எம்.ஜி.ஆர்.

தமிழ்நாட்டில் உள்ள பிராமணர்கள் தங்களுக்கென்று ‘தாம்ப்ராஸ்’ என்ற அமைப்பை உருவாக்கினார்கள். கும்பகோணத்தைச் சேர்ந்த காசிராமன் இதற்காக பெருமுயற்சி எடுத்தார். அந்த நேரத்தில்

திராவிடர் கழகத்தின் பொதுச்செயலாளர் வீரமணி ‘பிராமணர் என்ற பெயரில் அமைப்பு உண்டாக்கினால் அதை எதிர்த்து போராடுவோம்’ என்று அறிக்கை வெளியிட்டார்.

முதலமைச்சர் எம்.ஜி.ஆர். உறுதியோடு கையாண்டார். “எல்லாப் பிரிவினரைப்போலவும் தங்களுக்கு அமைப்பை உண்டாக்கிக்கொள்ள பிராமணர்களுக்கு உரிமை உண்டு. தாம்ப்ராஸ் கூட்டங்களுக்கு காவல்துறை பாதுகாப்பு அளிக்கும்” என்று தெரிவித்தார்.

எம்.ஜி.ஆர். அறிவிப்புக்குப் பிறகு வீரமணியிடமிருந்து வெகுநாட்களுக்கு சத்தமே இல்லை.

பக்தி பற்றிய எம்.ஜி.ஆரின் விளக்கமும் மிகவும் சிறப்பானது.

பக்தி படங்களில் நடிப்பீர்களா?

“நடிகர்கள் கடவுளாக வேஷம் போட்டுக் கொண்டு வந்து நடிக்கின்ற படங்கள் வேறு, தெய்வத்தன்மை என்பது வேறு. படங்களைப் பார்ப்பதால் மட்டும் ஒருவருக்கு தெய்வ பக்தி வரும் என்றோ அல்லது அதிகரிக்கும் என்றோ நான் நினைக்கவில்லை. பக்தி என்பது பரிசுத்தமானது. பக்தன் என்பவன் பரிசுத்தமானவன். முன்பு கடவுளை தங்கள் உள்ளத்தில் வைத்திருந்தார்கள். இப்போதோ கடவுள் கோயில்களில் இருப்பதாகத்தான் நினைக்கிறார்கள்”.

“இதனால்தான் இந்தப் பிரச்சனைகளே வந்தன. எண்ணற்ற கோயில்களை வைத்துக்கொண்டு வளர்க்க முடியாத பக்தியை திரைப்படங்களா வளர்த்துவிடப் போகிறது.”

“ஒரு படத்தின் மூலமாக உயர்ந்த கருத்துகளைப் புகட்டி மக்கள் மனங்களில் எல்லா சமயத்திலும் ஒழுங்குமுறையை வளர்த்தால் அதுவே ஒரு பக்திப்படம்தான்”!

“தாயிடத்தில் அன்பு, தந்தையிடத்திலே மரியாதை, ஆசானிடத்தில் பயபக்தி, நண்பனிடத்தில் பாசம், ஏழைகளிடத்தில் இரக்கம் என்ற இந்த பண்புகள்தான் தெய்வபக்தி. மனதில் தூய்மை ஏற்பட்டால்

அதுதான் பக்தி. அந்தத் தூய்மையை ஏற்படுத்துவதற்கு நான் அந்தக் கடவுள் வேஷம் போட்டுத்தான் நடிக்க வேண்டுமா என்ன?” என்றார் எம்.ஜி.ஆர்.

இன்னொரு கேள்விக்கு எம்.ஜி.ஆர். கொடுத்த பதில் இது.

“தாங்கள் ஏன் கோயிலுக்கே போவதில்லை?”

“கடவுள் நம்பிக்கை உள்ளவனுக்குப் பெரியவர்கள் சொல்லுகின்ற விளக்கம், ‘தூணிலும் இருப்பான், துரும்பிலும் இருப்பான்’ என்பது. என்னைச் சுற்றியுள்ள மனித தெய்வங்களுக்கே நான் இன்னும் கடமையை நிறைவேற்றவில்லையே! அதை முடித்தால்தான் கடவுளைக் காணும் தகுதி எனக்கு உண்டு” என்றார் எம்.ஜி.ஆர்.

திருச்சி பாரதிதாசன் பல்கலைக்கழக துவக்கவிழாவில் பேசிய எம்.ஜி.ஆர், “எங்களுக்குத் தலைவர் அண்ணா. அண்ணாவுக்குத் தலைவர் பெரியார். எந்த வழியைப் பின்பற்றுகிறீர்கள் என்று யாராவது கேட்டால் அண்ணா வழிதான் நாங்கள் பின்பற்றுவது” என்றார்.

அதாவது ஈ.வெ.ரா.வின் ஹிந்து மத வெறுப்பு கோஷத்திற்கும் தனக்கும் சம்பந்தமில்லை என்பதைத் தெளிவாகச் சொல்லிவிட்டார் அவர்.

தான் ஒரு ஹிந்து என்ற உணர்ச்சியை வெளிப்படுத்தும் விதமாக காமராஜர் மாவட்டம் துவக்க விழாவில் பேசினார் எம்.ஜி.ஆர். “ஒரு கிறிஸ்தவர் மாதா கோவிலுக்குப் போகலாம். ஒரு முஸ்லீம் மசூதிக்குப் போகலாம். ஒரு ஹிந்து கோயிலுக்குப் போகக் கூடாது என்று சொன்னால் அதை நான் ஏற்க மாட்டேன்” என்று அடித்துப் பேசினார்.

எம்.ஜி.ஆருடைய ஆட்சித் திறமைக்கும் சமயப்பற்றுக்கும் சவால் விடும்படியான நிகழ்ச்சிகள் கன்னியாகுமரி மாவட்டத்தில் 1982ல் நடந்தன. பெண்களின் சபரிமலை என்று போற்றப்படும் மண்டைக்காடு பகவதி அம்மன் கோயிலுக்கு இருமுடி கட்டிவந்த பக்தர்கள் கிறிஸ்தவர்களால் துன்புறுத்தப்பட்டனர்.

இதைத்தொடர்ந்து வெடித்த கலவரத்தில் ஹிந்துக் குடும்பங்கள் வாழும் பகுதிகள் தீயிடப்பட்டன.

ஹிந்துக்கள் பாதிக்கப்பட்டார்கள் என்று கேள்விப்பட்டவுடன் கொதித்தெழுந்தார் எம்.ஜி.ஆர். அவர் எடுத்த நடவடிக்கை என்ன என்பதைப் பார்க்கலாம்.

# 23. வந்தார் ஜலகண்டேஸ்வரர், வணங்கினார் எம்.ஜி.ஆர்!

மண்டைக்காடு பகவதி அம்மன் கோயிலுக்கு வந்த பக்தர்கள் தாக்கப்பட்டார்கள் என்ற செய்தியைக் கேள்விப்பட்டவுடன் எம்.ஜி.ஆரின் கோபம் எல்லை மீறிப்போனது. “நம்ம நாடு, நம்ம ஜனங்கள், நம்ம கோயிலுக்குப் போகக்கூடாதா” என்று கேட்டார் எம்.ஜி.ஆர். ஹிந்துக்களுக்கு எதிராகச் செயல்பட்ட மாவட்ட கலெக்டரை இடம¢ மாறச் செய்தார்.

1983ல் காஞ்சி சங்கராச்சாரியார் ஜெயேந்திரர் சென்னையில் நடத்திய கலாச்சார மாநாட்டில், எம்.ஜி.ஆர். கலந்துகொண்டார். அங்கே பேசும்போது, “முஸ்லிம்களுக்கு ஒரு தலைமை உள்ளது. கிறிஸ்தவர்களுக்கு ஒரு தலைமை உள்ளது. ஹிந்துக்களுக்கு ஒரு தலைமை இல்லை. அதை உருவாக்க வேண்டும்” என்று கூறினார். சென்னையில் உள்ள பரங்கிமலையை தோமையர் மலை என்று பெயர் மாற்றம் செய்ய கிறிஸ்தவர்கள் முயற்சி செய்தார்கள். எம்.ஜி.ஆர். இதை முறியடித்தார்.

இவை எல்லாவற்றையும் விட வேலூர் ஜலகண்டேஸ்வரர் கோயிலை வழிபாட்டுக்குரியதாகச் செய்ததில் எம்.ஜி.ஆர¤ன¢ பங்கு முக்கியமானது. வேலூர் நகரின் மத்தியப் பகுதியில், சுற்றிலும் அகழிகளைக் கொண்ட ஒரு கோட்டை இருக்கிறது. அந்தக் கோட்டையின் உள்ளே பிரம்மாண்டமான கோபுரத்தோடும், சிற்ப வேலைப்பாடுகளோடும் அமைந்த சிவன் கோயில் உள்ளது. அந்த சிவனுக்கு ஜலகண்டேஸ்வரர் என்று பெயர். வேலூரை திப்புசுல்தான் படை ஆக்கிரமித்தபோது, இந்தக் கோயில் சூறையாடப்பட்டது. கலைச் செல்வங்கள் சேதப்படுத்தப்பட்டன. பக்தர்கள் முயற்சியால் மூலவர் அப்புறப்படுத்தப்பட்டு, வேலூரின் புறநகர்ப் பகுதியான சத்துவாச்சாரிக்கு எடுத்துச் செல்லப்பட்டார். அங்கே பிரதிஷ்டை

செய்யப்பட்ட அந்த லிங்கத்துக்குக் கோயில் கட்டப்பட்டு, பக்தர்கள் வழிபடத் தொடங்கினார்கள்.

நாடு விடுதலை பெற்றவுடன் ஜலகண்டேஸ்வரரை மீண்டும் கோட்டைக்குள் கொண்டு வந்துவிட வேண்டும் என்பதே வேலூர் மக்களின் விருப்பமாக இருந்தது. சமய அறிஞரான கிருபானந்த வாரியார் இதற்கான முயற்சி செய்தார். வேலூர் மக்களிடமிருந்து ஒரு லட்ச ரூபாய் நிதி திரட்டினார். வாரியார், தலைநகர் டெல்லிக்குச் சென்று பாரத பிரதமர் ஜவஹர்லால் நேருவை சந்திக்க முயற்சி செய்தார். அவருடைய முயற்சிக்குப் பலன் இல்லை. வருத்தத்துடன் ஊருக்குத் திரும்பிய வாரியார், மக்கள் கொடுத்த பணத்தைத் திரும்பக் கொடுத்துவிட்டார்.

1981 ஜனவரி மாதம் வேலூர் கோட்டை மைதானத்தில், ஹிந்து முன்னணிப் பொதுக்கூட்டம் நடந்தது. அந்தக் கூட்டத்தில் பேசிய ஹிந்து முன்னணி நிறுவனர் இராம.கோபாலன், ஜலகண்டேஸ்வரர் கோயில் மீண்டும் வழிபாட்டுத்தலமாக மாற வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தினார். முதல் கட்டமாக சத்துவாச்சாரி மக்களிடம் பேசி, அங்கிருந்த லிங்கத்தை இடமாற்றம் செய்வதற்கு சம்மதம் பெறப்பட்டது. 15.03.1981 அன்று சத்துவாச்சாரியிலிருந்து லிங்கத்தை எடுத்து வந்து மறுநாள் காலையில் கோட்டையில் இருக்கும் கோயிலில் பிரதிஷ்டை வெற்றிகரமாக முடிந்தது. இந்தச் செய்தியை மக்களுக்குத் தெரிவிக்கும் விதமாக வேலூர் நகரெங்கும் சுவரொட்டிகள் ஒட்டப்பட்டன. ஆட்டோ மூலமும் பிரச்சாரம் நடந்தது.

400 ஆண்டுக்குப் பிறகு, ஜலகண்டேஸ்வரர் கோயிலில் நாதஸ்வர ஓசை கேட்கத் தொடங்கியது. வழிபாட்டுக்கு எந்த இடையூறும் செய்யக்கூடாது என்று முதலமைச்சர் எம்.ஜி.ஆர். காவல்துறைக்கு உத்தரவிட்டார். இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டில் தனக்கு அளிக்கப்பட்ட நினைவுப் பரிசை, ஜலகண்டேஸ்வரர் கோயிலுக்குக் காணிக்கையாகக் கொடுத்தார்.

சுதந்திர இந்தியாவின் எந்த முதலமைச்சரும் செய்யத் துணியாத ஒரு காரியத்தை எம்.ஜி.ஆர். செய்து சாதித்தார் என்று சொல்ல வேண்டும். எம்.ஜி.ஆர். இந்து சமயப் பற்றுள்ளவர். காஞ்சி. மஹாஸ்வாமிகள் மீது பற்று கொண்டவர். சமயம் சார்ந்த விஷயங்களில் சமரசம் செய்து கொள்ளாதவர் என்பதைப் பார்த்தோம். எம்.ஜி.ஆரின் துணைக்கோள்களாக இருந்தவர்கள், அவரை ஒட்டி எப்படிச் செயல்பட்டார்கள் என்பதைப் பார்த்தால் எம்.ஜி.ஆருடைய தாக்கம் அரசியலிலும் அரசு அதிகாரத்தைச் செலுத்துவதிலும் எப்படி செய்யப்பட்டது என்பது குறித்த தெளிவு உண்டாகும்.

எம்.ஜி.ஆர். அமைச்சரவையில் அறநிலையத்துறை அமைச்சராக இருந்தவர் ஆர்.எம்.வீரப்பன். அவருடைய வாழ்க்கை வரலாற்றை ராணி மைந்தன் எழுதியிருக்கிறார். அதிலிருந்து; “காஞ்சி மடத்தோடு தொடர்பு கொள்ளவோ, பெரியவரைச் சந்திக்கவோ ஆர்.எம்.வீ.க்கு வாய்ப்பு கிடைக்கவில்லை. அவர் அமைச்சராக பொறுப்பேற்பதற்கு முன்பாகவே பெரியவர், காஞ்சிபுரத்தை விட்டு வட இந்தியாவுக்கு யாத்திரை சென்றுவிட்டிருந்தார். அவர் தமிழகத்துக்குத் திரும்பிவரும் சாத்தியம் இல்லை என்றும் இமயமலைக்குப் போகப்போவதாகவும் யூகங்கள் நிலவி வந்தன” என்று எழுதுகிறார் ராணி மைந்தன் (பக்.339, 343).

# 24. காஞ்சிப் பெரியவருக்கு வரவேற்பு விழா

எம்.ஜி.ஆர். அமைச்சரவையில் அறநிலையத்துறையின் பொறுப்பிலிருந்தார் ஆர்.எம்.வீரப்பன். திராவிட இயக்கப் பின்னணியில் இருந்து வந்த அவருக்கு காஞ்சி சங்கர மடத்தோடும் மஹா ஸ்வாமிகளோடும் தொடர்பு ஏற்பட்டது பற்றி ராணிமைந்தன் எழுதுகிறார்.

“பெரியவரின் பிறந்த நாளை ஒவ்வொரு ஆண்டும் சென்னையில் ஆழ்வார்பேட்டையில் ஆஸ்திக சமாஜம் கொண்டாடுவது வழக்கம். வீனஸ் ரத்தினம் அய்யர் அப்போது அந்த சமாஜத்தின் பொறுப்பாளராகச் செயல்பட்டு வந்தார். அறநிலையத் துறை அமைச்சராக இவர் இருந்தபோது ஆஸ்திக சமாஜத்திடம் இருந்து அழைப்பு வந்தது. சம்பந்தப்பட்ட துறையின் அமைச்சர் என்பதால் அப்படி அழைப்பு வந்ததில் வியப்பும் இல்லை. ஆனால், பெரியவரைப் பற்றியோ, சங்கர மடத்தின் செயல்பாடுகள் குறித்தோ ஏதும் தெரிந்திராத நிலையில் அப்படிப்பட்ட ஒரு முக்கியமான நிகழ்ச்சியில் போய் மேம்போக்காகக் கலந்துகொள்ள ஆர்.எம்.வீ.க்கு விருப்பமில்லை. ரத்தினம் அய்யர் அவர்களுக்குப் பட்டும் படாமலும் ஒரு பதிலைச் சொன்னார். ஆனால், அவர் சொன்ன இன்னொரு விஷயம் இவரை வியப்பில் ஆழ்த்தியது. “பெரியவா தான் உங்களைக் கூப்பிடச் சொல்லி உத்தரவு அனுப்பியிருக்கிறார்” என்றாராம்.

தான் அமைச்சராகப் பதவி ஏற்றபோது இங்கே இல்லாதவர், தன்னைப் பற்றி ஏதும் தெரிந்திருக்க வாய்ப்பில்லாதவர், ‘விழாவிற்கு வீரப்பனைக் கூப்பிடுங்கள்’ என்று சொன்னது எப்படி? புரிந்து கொள்ள இயலவில்லை. வியப்பாக இருந்தது. அதேசமயம் அந்த அழைப்பை மறுக்கவும் முடியவில்லை.

அழைப்பை ஏற்றுக்கொண்ட பிறகு காஞ்சி மடத்தின் வரலாறு, ஸ்ரீசந்திரசேகரேந்திர சுவாமிகள் பற்றியெல்லாம் விரிவாகப் படித்து

அறிந்து கொண்டார் ஆர்.எம்.வீ.

“படிக்கப் படிக்க மாமுனிவர் மீது எனக்கு ஒரு இனம்புரியாத ஈர்ப்பு ஏற்பட்டது. உண்மையான துறவிக்கு உன்னதமான இலக்கணமாய் திகழ்ந்திருந்த அவர் எனது வணக்கத்திற்கும் மரியாதைக்கும் உரியவராக ஆனார். அப்படிப்பட்டவர் தமிழ்நாட்டில் இல்லாமல் அல்லது தமிழகத்திற்குத் திரும்பாமல் இருந்து விடக் கூடாது என்று நான் கருதினேன். அந்தப் பிறந்தநாள் நிகழ்ச்சியில் கலந்துகொண்டு பேசியபோது என் கருத்தை வலியுறுத்தினேன்”.

“தாங்கள் தமிழ்நாட்டை விட்டுப் போனதற்கு எது காரணமாக இருந்தாலும் அதை மறந்துவிட்டுத் திரும்ப வேண்டும். தங்களைப் போன்றவர்கள் தமிழகத்தில் தங்கியிருப்பது தமிழகத்திற்குப் பெருமை. எனவே தாங்கள் திரும்பி வர வேண்டும்” என்று உளப்பூர்வமாக வேண்டுகோள் விடுத்தேன்.

“அந்த நிகழ்ச்சியில் கவியரசு கண்ணதாசன் அவர்களும், இலக்கியம், எழுத்து ஆகியவற்றில் ஆர்வமும் திறமையும் கொண்டு தென்னிந்திய ரெயில்வேயில் உயர் அதிகாரியாக இருந்த சுப்பிரமணியம் அவர்களும் கலந்து கொண்டார்கள். என் அமைச்சர் வாழ்க்கையில் நான் கலந்து கொண்ட வித்தியாசமானதொரு நிகழ்ச்சியாக அது அமைந்தது”.

பின்னர் எதிர்பாராத விதமாக மாமுனிவரிடமிருந்து ஆர்.எம்.வீ. அவர்களுக்கு ஒரு கோரிக்கை வந்தது. வடக்கே சதாராவில் உத்தர சிதம்பரம் என்று ஒரு கோயிலை எழுப்பிக் கொண்டிருப்பதாகவும், நமது சிதம்பரம் நடராஜர் கோயிலைப் போலவே அமைத்து வரும் அந்தக் கோயிலில் ஒரு கோபுரத்தை தமிழக அரசு கட்டிக் கொடுக்க வேண்டுமென்றும் வந்த அந்தக் கோரிக்கையை உடனடியாக ஏற்றுக் கொண்டு, அதை நிறைவாகச் செய்து தந்தார் ஆர்.எம்.வீ.

சில காலம் கழித்து ‘மாமுனிவர் தமிழகத்திற்குத் திரும்பிக் கொண்டிருக்கிறார்’ என்ற செய்தி கிடைத்தபோது இவர் மிகவும்

மகிழ்ச்சி அடைந்தார்.

திரும்பி வர வேண்டும் என்று தாம் விடுத்த அழைப்பினை பெரியவர் ஏற்றுக்கொண்டு வருகிறாரா, அல்லது அவராகவே மனம் மாறி திரும்புகிறாரா என்றெல்லாம் ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கவில்லை. மாமுனிவர் மீண்டும் காஞ்சிக்குத் திரும்புகிறார் என்ற செய்தியே போதும் என்று நினைத்தார்.

1984ம் ஆண்டு ஜனவரி—/பிப்ரவரி ஒரு தேதியில் தமிழகத்திற்கு காஞ்சி பெரியவர் வருகிறார் என்ற தகவல் அரக்கோணம் ராஜகோபால் என்பவர் மூலமாக ஆர்.எம்.வீ.க்குக் கிடைத்தது. காங்கிரஸ்காரரான ராஜகோபால் காஞ்சி மடத்தோடும் மாமுனிவரோடும் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தவர்.

காஞ்சிப் பெரியவர் வருவதை ஒரு விழாவாக ஏற்பாடு செய்யுங்கள். எல்லாப் பிரிவினரையும் அழைத்து அவருக்கு மகத்தான வரவேற்பு கொடுங்கள். ஏதோ பெரியவர் என்றால் அவர் அருகே பிராமணர்கள்தான் செல்ல முடியும் என்று நிலவி வரும் தவறான கருத்தை மாற்றுவதுபோல அந்த வரவேற்பு இருக்க வேண்டும். இதில் அரசு தலையிடாது. நான் வந்து கலந்து கொள்கிறேன். ஆனால், என் பெயரைப் போட வேண்டாம் என்று ஆர்.எம்.வீ. கேட்டுக்கொண்டார்.

அதைப்போலவே காட்பாடிக்கு அருகே காஞ்சிப₵ பெரியவருக்கு சீரும் சிறப்புமாக ஒரு வரவேற்பு தரப்பட்டது. அதில் இவர் கலந்து கொண்டார்.

காஞ்சி மஹா ஸ்வாமிகளை ஆர்.எம்.வீரப்பன் சந்தித்தது பற்றி பார்ப்போம்.

# 25. குளம், மழை, பசு: பிரசாதங்கள்!

எம்.ஜி.ஆர். அமைச்சரவையில் அறநிலையத் துறை அமைச்சராக இருந்த ஆர்.எம்.வீரப்பன் காஞ்சி மகாஸ்வாமிகளை காட்பாடி அருகே சந்தித்து ஆசி பெற்றுக் கொண்டார்.

அதன் பிறகு தான் அமைச்சராக இருந்தபோது இரண்டு மூன்று முறை அந்தப் பெரியவரை நேரில் சந்தித்துப் பேசும் வாய்ப்பு இவருக்குக் கிடைத்தது. தன் இனிய நண்பர் என்.தேவநாதன் அவர்களோடும் தன் குடும்பத்தோடும் ஒருமுறை சந்தித்திருக்கிறார். அந்த சந்திப்புகள் எல்லாம் வீரப்பன் அவர்களால் மறக்க முடியாத சந்திப்புகளாகவே அமைந்தன.

ஒருமுறை ஆர¢.எம¢.வ¦யோடு உரையாடிக் கொண்டிருந்த சமயம் தன் உதவியாளரைப் பார்த்து, “அந்தப் பெரிய புராணம் புத்தகத்தைக் கொண்டு வா” என்று உத்தரவிட்டார் பெரியவர்.

அதில் பக்கங்களைப் புரட்டி ஒரு சில பகுதிகளைப் படிக்கச் சொல்லி ஆர்.எம்.வீக்கு விளக்கம் தந்தார்.

காஞ்சிபுரத்தில் ஒவ்வொரு நாளும் மக்கள் நீராட ஒவ்வொரு குளம் என்று அந்த நாட்களில் வரையறுக்கப்பட்டிருந்ததையும் பின்னர் காலப்போக்கில் அந்தக் குளங்கள் எல்லாம் பலரால் கையகப்படுத்தப்பட்டு அவை செடி கொடிகள் வளர்ந்த, பயன்படாத வெற்று பூமியாக விட்டன என்பதையும் அத்தகைய குளங்களில் செவ்வாய்க் கிழமைகளில் மக்கள் நீராடவென்று பயன்பட்டு வந்த ‘மங்கள தீர்த்தம்’ என்ற குளம் காஞ்சி காமகோடி மடத்துக்கு வெகு அருகில் இருந்ததையும் மகாஸ்வாமிகளின் விளக்கத்திலிருந்து ஆர்.எம்.வீ. தெரிந்து கொண்டார்.

‘மங்கள தீர்த்தம்’ குளம் பற்றிய குறிப்புகளைக் கொடுத்து “இந்தக் குளத்தைச் சுத்தம் பண்ணி நீராடக்கூடிய குளமாக ஆக்கிக் கொடு” என்று காஞ்சி மகாஸ்வாமிகள் கேட்டுக் கொண்டார்.

“மிக வேகமாகச் செயல்பட்டார் அமைச்சர். மாவட்ட ஆட்சியரை உடனே தொடர்பு கொண்டு அந்தக் குளப்பகுதியில் ஆக்கிரமிப்புகளை உடனே அகற்றும்படி ஆணையிட்டார். குளத்தைச் சுத்தப்படுத்தத் தேவையான நிதி ஆதாரங்களை விரைந்து உருவாக்கினார்.

தன்னுடைய நேரடி கண்காணிப்பில் மங்கள தீர்த்தம் குளம் மறுபிறவி எடுக்கும் முயற்சிகளைத் தினமும் தொடர்ந்து மேற்கொண்டார்”

என்கிறார் ராணி மைந்தன்.

எம்.ஜி.ஆர். அமைச்சரவையில் மூத¢தவர க.ராசாராம். இவருக்கு காஞ்சி மகாஸ்வாமிகளோடு ஏற்பட்ட அனுபவம் உணர்ச்சிமயமானது. அதுபற்றி அவரே சொல்கிறார்.

புரட்சித் தலைவர் என்னிடம் விவசாயத் துறையைக் கொடுத்த நேரம், நாட்டில் மழை இல்லை. காஞ்சிக்குச் செல்லும் வழியில் விவசாய இலாகா கட்டடம் ஒன்றைத் திறக்க வேண்டியிருந்தது. நிகழ்ச்சி முடிந்ததும் காஞ்சிக்கு வருவதாக மகாஸ்வாமிகளுக்கு சேதி அனுப்பினேன். எனக்கு எல்லா அலுவல்களும் முடிய பகல் 1.00 மணிக்கு மேலாயிற்று. சுமார் 2.15 மணிக்கு மடத்தினுள் நுழைந்தேன். நிர்வாகி நீலகண்ட ஐயர், “மகா ஸ்வாமிகள் காத்திருந்துவிட்டு மேடையிலேயே படுத்து உறங்கிவிட்டார்” என்று என்னை மேடை அருகே அழைத்துச் சென்றார்.

நான் அங்கு மெதுவாகக் காலடி ஓசை கூட எழாமல் சென்றேன். ஒரு சில நிமிடங்கள்தான் இருக்கும். அப்படியே புரண்டு எழுந்தார். என்னைப் பார்த்ததும், “வந்து நீண்ட நேரம் ஆயிற்றா?” என்றார். “இப்போதுதான் வந்தேன்” என்றேன். “என்ன விஷயமாய் என்னைப் பார்க்க வந்தாய்?” என்றார். “தமிழக முதல்வர் எம்.ஜி.ஆர். எதிர்பாராத வகையில் என்னிடம் விவசாய இலாகாவையும் தந்துவிட்டார். நாட்டில் மழையே இல்லை. சென்னை நகரம் குடிதண்ணீருக்குச் சங்கடப்படுகிறது. விவசாயிகளுக்கு உழவு வேலை

தந்து அவர்களை வாழ வைக்கும் பொறுப்பு என்னிடம். தாங்கள் மழைக்காகப் பிரார்த்தனை செய்ய வேண்டும்'' என்றேன்.

"இதற்காகவா என்னைக் காண வந்தாய்?'' என்றார் காஞ்சி மகாஸ்வாமிகள்.

"வேறு எதற்கும் இல்லை. இந்த வேண்டுகோளைத் தங்கள் முன் வைக்கவே வந்தேன்'' என்றேன். சற்று யோசித்துவிட்டு, "காமாட்சி அம்மன் கோயிலில் மழைக்காக யாகம் ஒன்று செய்ய ஏற்பாடு செய்கிறேன்'' என்றார்.

"நான் பகலுணவுக்குப்பின் அடுத்த நிகழ்ச்சிக்காக காரில் உடனடியாகப் புறப்பட்டேன். காரில் பின் சீட்டில் படுத்துத் தூங்க ஆரம்பித்தேன். எங்கு படுத்தாலும் உடனே தூங்கிவிடுவேன். சற்று நேரத்தில் கார் நெளிந்தது. என்னவென்று சற்றுக் கண் விழித்தேன். கார் ஸ்ரீபெரும்புதூரை நெருங்கிக் கொண்டிருந்தது. வானமே கிழித்துக் கொண்டதைப் போல் ஒரே மழை! கண்களை அகல விரித்துப் பார்த்தேன். நம்ப முடியவில்லை! மழை கொட்டோ கொட்டென்று கொட்டியது. காரில் இருந்தவாறே காஞ்சி மகாஸ்வாமிகளை மனதார வணங்கினேன்'' என்று எழுதுகிறார் க.ராசாராம்.

ஈ.வெ.ரா.வின் கடவுள் மறுப்புக் கோட்பாட்டில் வளர்க்கப்பட்டவர்கள்தான் ஆர்.எம்.வீரப்பனும், க.ராசாராமும். அவர்களை எப்படி காஞ்சி மகாஸ்வாமிகள் ஆட்கொண்டார் என்பதைப் பார்த்தோம்.

ஹிந்து சமய நெறிகளுக்கும் சமய ஆச்சார்யார்களுக்கும் எம்.ஜி.ஆரின் ஆட்சியில் உரிய இடம் கிடைத்தது. அதன் பலன், தமிழகத்துக்குக் கிடைத்தது என்பது ஒரு வரலாற்று உண்மை.

எம்.ஜி.ஆருடைய கட்சியான அ.இ.அ.திமுகவைச் சேர்ந்த தாமரைக்கனி காஞ்சிபுரத்தில் நடந்த பசுவதை தடுப்பு மாநாட்டில் கலந்துகொண்டார். அவர் பத்திரிகையாளர் எஸ்.லட்சுமிநரசிம்மனுக்கு அளித்த பேட்டி இது:

கேள்வி: உங்களது வீட்டில் மாடு வளர்க்கிறீர்களா?

பதில்: ஆமாம். மாடு வளர்க்கிறதை ஒரு புண்ணியமாக நினைக்கிறேன். பசுங்கறது கோமாதா. சொந்தமா வீடு கட்டினா கூட முதல்ல பசுவைத்தான் உள்ளே அனுப்பறோம். அதைப்போய் தோலுக்காகவும் மாமிச்சத்துக்காகவும் கடத்திக் கொல்றாங்க. பார்த்துக்கிட்டு சும்மா இருக்க முடியுமா?

கேள்வி: சமீபத்துல கூட கடத்தப்பட்ட மாடுகளை நீங்க மடக்கிப் பிடிச்சீங்களே. அது பற்றி?

பதில்: சினிமாவுல வர்ற மாதிரி அது ஒரு பெரிய கதை. எங்க ஊர்ல பசு பாதுகாப்பு குழுன்னு ஒண்ணு இருக்கு. அதுலருந்து எங்கிட்ட புகார் கொடுத்தாங்க.

“அந்த சமயத்திலே மாடுகளை கடத்தறாங்கன்னு தகவல் வந்தது. அதிகாரிங்க கிட்ட சொன்னேன். ஒருத்தரும் வரலை. அப்பறம் நாங்களே ஆட்டோவில போய் மடக்கிப் பிடிச்சோம். என் மேலே லாரி ஏத்திக் கொல்லப் பாத்தாங்க. எல்லாவற்றையும் மீறி மக்கள் என் பக்கம் இருந்ததால் மாடுகளை மீட்டு நகராட்சி இடத்தில் வைத்திருந்தோம்” என்கிறார் தாமரைக்கனி.

# 26. எம்.ஜி.ஆர். தேசபக்தர், பக்திமான்

பசுக்களைப் பாதுகாப்பதற்காக அதிரடி நடவடிக்கை எடுத்த அ.இ.அ.தி.மு.க. நிர்வாகி தாமரைக்கனி சொல்கிறார்:

“பசுங்கறது தெய்வம்ங்க. ஆர்.எஸ்.எஸ். ஆட்கள்தான் அதைக் காப்பத்தணும்னு இல்லை. ஜாதி, மத, கட்சி, வித்தியாசம் இல்லாம யார் வேணும்னாலும் குரல் கொடுக்கலாம். அதோட, என் தொகுதில எல்லா மக்களுக்கும் பிரதிநிதி நான். நியாயமா யார் கேட்டாலும் நான் செஞ்சாகணும். அப்படித்தான் பசுக்களைக் காப்பாத்தினேன். ஆர்.எஸ்.எஸ்ஸும் பாஜகவும் தான் பசுக்களைப் பாதுகாக்கணும்னு சட்டம் எதுவும் இல்லை.”
கடவுள் இல்லை என்றும் கடவுளைக் கும்பிடுபவன் காட்டுமிராண்டி என்றும் கூக்குரலிடுவது ஈ.வெ.ரா.வின் வழக்கம். இதிலிருந்து மாறுபட்டு கோயில்களுக்கும் சமயத்தின் புனித மரபுகளுக¢கும¢ உரிய மரியாதை கொடுத்தவர் எம்.ஜி.ஆர். இந்தப் பழக்கம் தாமரைக்கனியிடம் தொடர்ந்தது. அந்தக் கட்சிக்காரர்களிடம் இன்றுவரை தொடர்கிறது.

தெய்வத்தைப் போற்றியவர் எம்.ஜி.ஆர். என்பதற்கான சான்றுகளைப் பார்த்தோம். தேசத்தையும் போற்றியவர் அவர். தமிழகத்தின் தவப்புதல்வரான மகாகவி பாரதியின் நூற்றாண்டு விழாவை மிகப் பெரிய அளவில் கொண்டாடினார் முதலமைச்சர் எம்.ஜி.ஆர். (1981).

எட்டயபுரத்தில் நடைபெற்ற மிகப்பெரிய விழாவில் பஞ்சாப் மாநில முதல்வர் தர்பாராசிங், கேரள மாநில ஆளுநர் ஜோதி வெங்கடாஜலம், கர்நாடக மாநில முதல்வர் ஆர்.குண்டுராவ், ஆந்திர மாநில அமைச்சர் ஸ்ரீபட்டம் ராமமூர்த்தி ஆகியோர் கலந்து கொண்டனர்.

அந்த விழாவில் எம்.ஜி.ஆர். பேசிய உரையிலிருந்து:

“பாரதிக்கு முன்பு எத்தனையோ கவிஞர்கள் இருந்திருக்கிறார்கள். அவருக்குப் பின்னரும் எத்தனையோ கவிஞர்கள் தோன்றியிருக்கிறார்கள்; தோன்றிக்கொண்டிருக்கிறார்கள். பாரதி எடுத்துச் சொல்லிய கருத்துக்களை எல்லாம் வைத்துச் சில கேள்விகளைக் கேட்டு, நாமே அவற்றிற்கு விடை கூறிக்கொண்டால் அவர் யார் என்பது விளங்கும்.

சமூக சீர்திருத்தத்தில் அவர் ஆர்வம் கொண்டிருந்தவரா என்று கேட்டால், ஆம் என்ற விடை கிடைக்கும். பெண்கள் மறுமலர்ச்சிக்குரிய கருத்துகளை வெளியிட்டவரா என்று கேட்டால், ஆமாம் என்ற பதில் கிடைக்கும். ஆணும் பெண்ணும் சரிநிகர் சமானமாக வாழ வேண்டும் என்ற தத்துவத்தை எடுத்துச் சொன்னாரா என்றால், ஆமாம் என்னும் பதிலே கிடைக்கும்.

இந்த நாட்டில்— சமூகத்தில் ஏற்றத்தாழ்வு கூடாது என்ற கொள்கையைத் தனது கவிதையின் மூலம் தெரிவித்தாரா என்று கேட்டால், ஆமாம் என்ற பதிலேதான் கிடைக்கும். சாதிகள் கூடாது என்ற உண்மையை — தனது உணர்வை— எழுதி— பேசி வந்தவரா என்றால், ஆமாம் என்னும் பதிலே கிடைக்கும். நாட்டு விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டவரா என்று கேட்டால், ஆமாம் என்ற பதிலே கிடைக்கும்...

எந்தப் புரட்சிக் கருத்தையும் இன்று கூற முடியும். ஆனால், அதனைச் சொல்ல முடியாத காலத்தில் சொல்வதற்கு அச்சப்பட்ட காலத்தில் அதனைத் துணிவாகச் சொல்லியிருக்கிறார். எத்தனை துணிச்சல் இருந்தால் சொல்லியிருக்க முடியும் என்பதை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும்.

பஞ்சாப் மாநில முதல்வர் தர்பாரா சிங் இந்த விழாவில் ஆர்வத்துடன் பங்கேற்றிருக்கிறார்கள். அடுத்த ஆண்டு பஞ்சாபில், பாரதியார் பிறந்தநாள் விழா கொண்டாடப்படும் என்று அவர் சொன்னார். வங்காள முதல்வர் ஜோதிபாசு நாங்கள் கொண்டாட இருக்கிறோம். உங்களின்

உதவி தேவை என்று கடிதம் எழுதியிருக்கிறார்கள். உத்தரப்பிரதேச முதல்வர் நாங்களும் கொண்டாடப் போகிறோம் என்று சொல்லியிருக்கிறார்கள். மற்ற மாநிலங்களும் அவ்வாறே கொண்டாட இருக்கின்றன. பாரதியின் புகழ்—, தியாகம்,— ஆற்றல் இந்தியர் அனைவருக்கும் —— இந்தியத் துணைக்கண்டம் முழுதுக்கும் பயன்பட வேண்டும் என்பது மட்டுமல்ல, உலகுக்கே பயன்பட வேண்டும் என்பது எனது விருப்பம்.

சிலருக்கு சில நாட்கள் புகழ் இருக்கலாம். சில வாரங்கள் புகழ் இருக்கலாம். சில மாதங்கள் புகழ் இருக்கலாம். ஆனால், பாரதியின் புகழ் நூற்றாண்டுக்கு மேலாக இருந்து வருகிறது. இன்னும் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு அது இருக்கும்—.சமுதாயம் அவரைப் போற்றும் வாழ்த்தும் என அறுதியிட்டுக் கூறுகிறேன். அவரை தேசிய கவி என்பதா, மகா கவி என்பதா, தேசிய மகா கவி என்பதா? அந்தப் பெருமையை எண்ணித்தான் விழா கொண்டாடப்படுகிறது.

முன்பு ஒரு காலத்தில், அவரவர் தாய் மொழியில் எண்ணங்களை வெளியிட இயலாது. ஆங்கில மொழியில்தான் சரிவர எண்ண சொல்ல முடிகிறது என்று சொல்லப்பட்டது. அதைக்கேட்ட பாரதி ‘இந்த வேதனையை நான் எங்கே போய் சொல்வேன்’ என்று கேட்டுக் கண்ணீர் சிந்தினார். ஆங்கில மொழியில் கற்றால்தான் ஒழுக்கம் சிறப்பாக இருக்க முடியும் என்று சிலர் கருதுகின்றனர். ஆங்கிலம் படிக்கும் குழந்தைகள்தான் ஒழுக்கத்தில் தவறிவிடுகின்றன என்பதை பாரதி சொன்னார். ஆங்கில மோகத்திற்கு முற்றுப்புள்ளி வைக்க விரும்பினார்” என்றார் எம்.ஜி.ஆர்.
தமிழ் மொழியைக் “காட்டுமிராண்டி மொழி” என்று சொன்னவர் ஈ.வெ.ரா. அவர் தமிழ்க் கல்வியைக் கடுமையாக எதிர்த்தார். தமிழைப் போற்றியவர் எம்.ஜி.ஆர். அவர் பாரதியாரைப் போற்றினார். தெய்வத்தைப் போற்றினார். தேசத்தைப் போற்றினார்.

இந்தப் பின்னணியில் எம்.ஜி.ஆரின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடும் தகுதி ஈ.வெ.ரா.வின் சீடர்களுக்கு உண்டா என்பது

